

உ

# தமிழ்ப் பொழில்

தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்கள் வெளியீடு

| துணர் ௰௪ | வெகுதானிய, பங்குனி | மலர் ௰௨ |
| --- | --- | --- |

சேதிராயர் அருளிய

## திருவிசைப்பா

[மூலமும்—உரையும்.]

*தமிழாசிரியர், திரு. A. நடேசன் அவர்கள், பொன்னேரி.*

### கோயில்

1 சேலு லாம்வயல் தில்லையு ளீருமைச்
சால நாளயன் சார்வதி னாலிவள்
வேலை யார்விடம் உண்டுகந் தீரேன்று
மால தாகுமேன் வாள் நுதலே.

பதவுரை:- *சேல்—கயல், உலாம்-உலவும், வயல்-கழனி (சூழ்ந்த) தில்லை-சிதம்பரத்தில் உளீர்- (கோயில் கொண்டு எழுந்தருளி) உள்ள எம்பெருமானே, அயன்-பிரமனும், உமை-உம்மை, சார்வு-அடைதல், சால-மிகு, நாள்-காலம் (முயன்றும் முடியவில்லை), அதினால்-ஆதலால், மென்மை-மெல்லிய (இயல் வாய்ந்த) வாள்-ஒளி (பொருந்திய), நுதல்-நெற்றி(யை உடையவளாகிய) இவள்-இம்மங்கை (ஆகிய எம்தலைவி) வேலை-திருப்பாற் கடலிற்றோன்றிய, ஆர்-நிறைந்த, விடம்-நஞ்சை, உண்டு-உட்கொண்டு, உகந்தீர்-மகிழ்ந்தவரே, என்று-எனக்கூறி, மால்-மயக்கம், ஆகும்-வளரப்பெறும்.*

உலாம்-பரந்த எனலும் ஆகும். அயனும் என்ற சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. மென்மையும் வாள்நுதலும் உடைய வள் ஆகிய இவள் என்க.

**கருத்து:—** அயனும் சார்வரிதுகருதித் தன் சார்வு கிடைக்குங்கொல் என மாலாயினள். ஆதலின் விரைவில் வரைந்தருள்க என்பதாயிற்று.

விடம் உண்டுகந்தீர் எனவிளித்தது 'பலராலும் கூறப்படும் அலருக்குரிய இவளையும் வரைந்து மகிழ்க' என்னுங் குறிப்புப் பற்றியாம்.

**சேலுலாம் வயல் தில்லை**

சேல்தான் திகழ்வயல் சிற்றம்பலவர். (திருக்கோவை)
சேலாடும் வயல் தில்லை. (திருவாலிய முதனார்)
சேலுகளும் வயல் சூழ்தில்லை ,,

**சாலநாள் அயன் சார்வது**

மலரிணேனும்............நணுகல் அரிய.......நம்பெருமான் (திருஞானசம்பந்தர்)
அயனும்............தொடரவொண்ணுச்சோதி ,,

**வேலையார் விடம் உண்டுகேந்தீர்,**

நஞ்சே அமுதாய் நயந்தீர். (மாணிக்)
கடல் நஞ்சை உண்டுகந்த காபாலி ,,
ஆலந்தானுகந் தமுதுசெய்தானை (சுந்த)
நஞ்சுண் டுகந்திருந்த........எம்பிரான் (அப்பர்)
கடல் நஞ்சுண்டுகந்த மைந்தன் ,,
ஆலால முண்டுகந்த ஐயன் ,,
நஞ்சையுண்டுகந்த (சம்பந்)
கடல் நஞ்சையுண்டு களிமாந்தி ,,
வேலையுள் நஞ்சம் விருப்பாக உண்ணவனே ,,
கார்விடம்........உண்டுகந்த........விண்ணவனே ,,
கடலிடை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன் ,,
நஞ்சமு துண்டுகந்து ,,

**மாலதாகும்**

மால் செய்து வெளவவே (சம்பந்தர்)
மாலும் என் நெஞ்சு (குறள்)

2 வாணு தற்கோடி மாலது வாய்மிக
நாண மற்றனள் நானறி யேனினிச்
சேணு தற்பொலி தில்லையு ளீர்உமைக்
காணி லெய்ப்பிலள் காரிகையே

பதவுரை:— சேண்-வானின், நுதல்-நெற்றிமட்டில் (ஓங்கிய மாடங்களால்), பொலி-விளங்குகின்ற, தில்லை-சிதம்பரத்தில், உளீர்-(திருக்கோயில்கொண்டு)உள்ள இறைவனே, வாள்-ஒண்மை (வாய்ந்த) நுதல்-நெற்றியையுடைய, கொடி- (கொடிபோலும் துவளும் தன்மை வாய்ந்த) எம் தலைவி, மிக-மிக்க, மால்-மயக்கம், ஆய்-வளர்ந்தவளாகிய (அது காரணத்தால்) நாணம்-வெட்கமும், அற்றனள்-நீங்கினள், (அம்மயக்கமும் நாணற்ற தன்மையும் நீங்கும்வழி வேறு ஒன்றையும்) நான், அறியேன்-உணரேன். இனி-இப்போது, உமை-உம்மை, காரிகை தலைவி, காணில்-கண்டால், எய்ப்பு-மெலிவு, இலள்-அற்றவள் (ஆவாள்)

நாணமும் என்ற சிறப்பும்மை தொக்கது. மகளிர்க்கு உயிரினும் நாணம் சிறந்தது; உமது மால்காரணத்தால் அஃதும் அற்றனள் என்றபடி.

நான் அறியேன் என்றது. "என்நெஞ்சு என்கொலாம் இன்று செய்கின்றதே" (திருக்கோவையார் 237)என்பதன் உரையிற் கண்ட யான் அறிகிலேன் என்பது போலாகும். உமைக்காணில் எய்ப்பிலள் எனவே காணு தொழியின் எய்ப்புற்று நாணமற்றதேபோல் உயிர்ப்பும் அறும் என்பதுமாயிற்று. எய்த்தல் பொருள் விரைந்து வரைக என்னுங் குறிப்புப் பற்றி கொடி என்றது. மிக என்பதை நாணம் அற்றனள் என்பதோடு இயைத்து நாணம் பெரிதும் அற்றனள் எனப் பொருள் கோடலும் ஒன்று. ஆவாள் என ஒரு சொல் வருவிக்கப் பட்டது.

கருத்துரை:—எம் தலைவி உம்மைக் கண்டால் மெலிவு நீங்கப் பெறுவாள். என்பதாயிற்று.

வாணுதற் கோடி

திருநுதற் கொடி (கல்லாடம்)

நாணம் அற்றனள்

நாணமும்......பிரிய விட்டனை யடைந்தனள் (திருவாலியமுதனார்)
நாண் வேலி நீங்கி (கல்லாடம்)
நாணும் அவர் கொண்டார் (குறள்)
நாணும் மறந்தேன் ,,

சேணுதற்பொலி தில்லை

சேணிற் பொலி தில்லை (திருக்கோவை)
சேணும் திகழ்மதில் சிற்றம்பலவன் ,,
சேண்பணை மாளிகைசூழ் தில்லை (தி. வா. அ.)
சேணார் மணி மாடத்தில்லை (புருடோத்தம நம்பி)

3 காரி கைக்கரு ளீர்கரு மால்கரி
ஈரு ரித்தெழு போர்வையி னீர்,மிகு
சீரி யல்தில்லை யாய்,சிவ னே,என்று
வேரி நற்குழ லாளிவள் விம்முமே.

பதவுரை:— கருமை-கரிய (நிறத்து) மால்-பெரிய, கரி-யானையின், ஈர்-உரிக்கப்பட்ட, உரித்து-தோலாலாகிய, எழு-கிளர்கின்ற, போர்வையினீர்-போர்வையை உடைய பெருமானே, வேரி-கந்தமுள்ள, நல்-சிறந்த, குழலாள்-கூந்தலினையுடையவளாகிய, இவள்-இம்மங்கை (ஆகிய எம் தலைவி), மிகு-மிக்க, சீர்-சிறப்பு (வாய்ந்த) இயல்-தன்மையுடைய, தில்லையாய்-சிதம்பரனே, சிவனே, என்று, விம்மும்-தேம்பி அழும், (ஆதலால் அப்படியழுகின்ற) காரிகைக்கு, அருளீர்-அருள்புரிவீராக.

உரித்ததால் எழு போர்வை என இயைத்தலும் ஒன்று. சீரும் இயலும் உடைய தில்லை என உம்மைத்தொகையும் ஆகும். ஆயின் இயல்-அழகு. சீர் இயல் தில்லையாய் எனவே காரிகைக்கு அருளலே உமக்கு சீர் இயல் என்பதாயிற்று. இன்பந் தருபவனுயிருந்தும் என்னை விம்ம விடுத்த லென்னே என்பதைக் குறிக்க சிவனே என்றது. அருளீர் என்பதை எதிர்மறையாக்கி எம் தலைவியின் விம்மலை அறிந்தும் அருள்புரிகின் றீரில்லை என்பதும் ஒன்று. வேரி-மதுவின் மணம்.

கருத்துரை:— தில்லையாய் சிவனே என விம்மும்; ஆதலால் அருளல் வேண்டும். (எ-று)

**கருமால் கரி ஈருரித்தெழு போர்வையினீர்**

கரியின் ஈருரி போர்த் துகந்தானை (சுந்த)
வாரணத்து ஈருரி போர்த்தவன் (அப்பர்)
மால்கரியின் உரிவைநல் உத்தரியம் (திருவாலி அமுதனர்)

**மிகுசீரியல் தில்லை**

சீரான் மல்கு தில்லை (கண்டராதித்தர்)
செம்மையாய்த் திகழ்கின்ற சிற்றம்பலம் (சம்பந்தர்)
சீர்த் தில்லை (திருமாளிகைத் தேவர்)

**சிவனே என்று விம்மும்**

சிவனே.........என்னும் (திருமாளிகைத்தே)
விடையாய் சிவனே (சுந்தரர்)
சிவனே............... (மாணிக்கவாசகர்)
சிவனே சிவனே என்று ,,
சிவனே எனுமால் (சம்பந்தர்)

**வேரிநற் குழலாள்**

வேரிமலி வார்குழல் (சம்பந்தர்)

4 விம்மி விம்மியே வெய்துயிர்த் தாளேனு
உம்மை யேநினைந் தேத்துமோன் றாகிலள்
செம்ம லோர்பயில் தில்லையு ளீரேங்கள்
அம்ம லோதி அயர் வுறுமே.

பதவுரை:— செம்மலோர்-உயர்ந்தோர், பயில்-வாழ், தில்லை-சிதம்பரத்தில், உளீர்-உள்ள இறையே, எங்கள்-எங்களுடைய, அம்-அழகிய, மல்—வளம்பொருந்திய. ஓதி-கூந்தலையுடைய தலைவி உம்மையே-நினைந்து-கருதி, விம்மி விம்மி-மிகத்தேம்பித்தேம்பி, வெய்துயிர்த்து. பெருமூச்சுவிட்டு, ஆள்-காத்தருள், எனு-என்று, ஏத்தும்-துதிக்கும், (ஏத்தி ஏத்தி) அயர்வு-சோர்வு, உறும்-அடையும், (இவையல்லாத வேறு ஊண், உறக்கம் ஆகிய) ஒன்று- (எந்த) ஒன்றையும் (கருதும் தன்மையுடையாள்) ஆகிலள்-ஆயினுளில்லை.

ஆள் எனு ஏத்தி அயர்வுறும் (அன்றி) ஒன்றாகிலள் என இயைக்க. ஒன்றும் ஆகிலள் என்பதில் முற்றும்மை தொக்கது. ஒன்பதாஞ் செய்யுளிலும் ஒன்றுமாகிலள் என்பதைக் காண்க. உம்மையே பிரிநிலை. செம்மலோர் பயில் தில்லையுளீர் எனவே உமக்கும் செம்மற்றன்மையுண்டு என்பதாயிற்று. விம்மி விம்மி என்னும் அடுக்கு மிகுதி பற்றி.

கருத்துரை:— எம் தலைவி உம்மையே நினைந்து ஏத்தி விம்மி வெய்துயிர்த்து அயர்ந்தாள்; இனி ஒரு செயலும் புரியும் பெற்றியிலள். (எ-று)

**விம்மி விம்மி வெய்துயிர்த்து.**

வெவ்வா யுயிர்ப்பொடு விம்மிக்கலுழ்ந்து புலந்து நைந்தாள் (திருக்கோவை)
வெப்புற்று வெய்துயிர்ப்புற்று. ,,
விம்மி விம்மி மெய்மறந்து (திருவாசகம்)
வெவ்வுயிர்க்கும் (கருவூர்த்தேவர்)
விம்மா நின்றழுவார்கட்கு (அப்பர்)
நெட்டுயிர்ப்பெறிந்து நெடுங்கணீருகுத்து (கல்லாடம்)

**உமையே நினைந்து ஏத்தும்.**

மற்றோர் தெய்வம் உன்னலள் (திருக்கோவை)
உன்னையன்றி மற்றொன் றுணரேனென்னும் (திருமாளிகைத்தே)
மதிக்கிலள் யாரையும் (அப்பர்)
பெருமான் திறம் உன்னி........உருகும் ,,
அவனுக்கே பிச்சியானுள் ,,
யாவும் கேளார் அவன்பெருமை யல்லால் (சம்பந்தர்)

ஒன்று கிலள்

ஏதேனும் ஆகாள் (திருவாசகம்)
வேறோர் பரிசிங் கொன்றில்லை ,,
வாழும்படி ஒன்றுங் கண்டிலம் (திருக்கோவை)
ஒன்றும் ஆகிலள் (இந்நூல் பாட்டு 9)

செம்மலோர் பயில் தில்லை

சிறப்புடை யடியார் தில்லை (திருமாளிகைத்தே)
புகழோர் தில்லை (திருவாலியமுத)
சிட்டர் வாழ் தில்லை (அப்பர்)
செற்றார் வாழ் தில்லை (சம்பந்தர்)
சிறப்பர் வாழ் தில்லை ,,
சேணார் வாழ் தில்லை ,,
சிட்டர் வாழ் தில்லை ,,
நல்லவர் பிரியாத சிற்றம்பலம் ,,
உயர்ந்தாருறை தில்லை ,,

அயர்வுறும்

அயர்வாக்கினையே (சம்பந்தர்)

5 அயர்வுற் றஞ்சலி கூப்பியந் தோஎனை
உயவுன் கொன்றையந் தாரரு ளாயெனும்
செயலுற் றார்மதில் தில்லையு ளீர்இவண்
மயலுற்றாள் என்றன் மாதிவளே.

பதவுரை:— செயல்-வேலைப்பாடு, உற்று-கொண்டு, ஆர்-பொருந்திய, மதில்-சுற்றுச் சுவர் உடைய, தில்லை-சிதம்பரத்தில், உளீர், என்றன்-என்னுடைய, மாது-தலைவியாகிய இவள், மயல்-மயக்கம், உற்றாள்-அடைந்தாள்(ஆகலால்) இவண்-இங்ஙனம், அயர்வு-சோர்வு, உற்று-கொண்டு, அஞ்சலி—கும்பிடாக, கூப்பி-கைகுவித்து, அந்தோ-ஐயோ, என்-என்னுடைய, ஐ-தலைவனே, உய-(நான் உயிர்) வாழ, உன்-உன்றனுடைய, கொன்றை-கொன்றைப்பூவாலாகிய, அம்-அழகிய, தார்-மாலையை, அருளாய்-தருவாய், எனும்-என்று மொழியும்.

செயலுற்றாரும் மதிலும் என உம்மைத் தொகையாக்கி செயலுற்றாரையும் மதிலையும் உடைய தில்லை எனலும் ஒன்று; ஆயின் செயல்-ஒழுக்கம். உயஉன்தாரருளாய் என்றதனால் அருளாயாயின் உய்வில்லை என்பதைத் தேற்றப் படுத்தியதாம். மாலை இரத்தல்.

**கருத்துரை** :—தார் தந்தாயினும் எம் தலைவியை உய்விப்பீர் (எ-று)

உயவுன் கொன்றையந் தாரருளாய்

நறுங்கொன்றைத் தாரருளா தொழிவானை (அப்பர்)
தார்க்கு நின்றிவள் தாழுமா காண்மினே ,,

அலங்கல் தந்தெனை அஞ்சலென்னுங்கொலோ (சம்பந்தர்)
வல்லியந்தார் நல்கலறம் (பு. வெ. மா)
தண்தார்......நல்கின் உண்டாமென்........உயிர். ,,

செயலுற்றார் மதில் தில்லை
சிற்பம் திகழ்தரு திண்மதில் தில்லை (தி. கோவை)
பொன்மதில் சூழ்தருதில்லை (திருவாலியமுதனார்)

6 மாதோர் கூறன்வண் டார்கொன்றை மார்பனென்
றோதில் உய்வன்ஒண் பைங்கிளி யேஎனும்
சேதித் தீர்சிரம் நான்முக னைத்தில்லை
வாதித் தீர்என் மடக்கொடி யையே.

பதவுரை:— நான்முகனை-அயனை, சிரம்-தலை, சேதித்தீர்-கொய்தவரே, என்-என்றனுடைய, மடம்-இளமைபொருந்திய, கொடியை-கொடிபோலும் (மென்மைத் தன்மையுடைய) தலைவியை, வாதித்தீர்-வருத்தினீர், (ஆதலால் அவள்) ஒண்-அறிவுள்ள, பை-பசுமை நிறத்தையுடைய, கிளியே, (நீ) மாது-பெண்(ஆகிய உமை) ஒரு, கூறன்-பாகன், வண்டு-(தேன்) ஈக்கள், ஆர்-தங்கும், கொன்றை-கொன்றை(ப்பூமாலை)யை அணிந்த, மார்பன்-மார்பினையுடையவன், தில்லை-சிதம்பரம், என்று-என (இப்படிப் பட்ட மொழிகளை) ஓதில்-மொழிந்தால், உய்வன்-உயிர்வாழ்வேன்' எனும்-என்றுரைக்கும்.

நான்முகனைச் சிரம் சேதித்தீர் என்பதில் நான்முகன் சிரத்தைச் சேதித்தீர் என உருபு பிரித்துக் கூட்டலும் ஒன்று. மடக்கொடி என்றதால் இளமையும் மென்மையும் கூறியவாறும். ஒண்கிளியே என்றது ஒண்புலவர் என்பதுபோல. அயன்மாட்டுக் கருணையின்றிச் சிரத்தைச் சேதித்தவாறே எம் தலைவியையும் வாதித்தீரே, என வன்கண்மை எடுத்து மொழிந்து இசையச் செய்தல். வண்டு ஆர் என்பதற்கு வண்டு (தேனை) உண்ணும் எனப் பொருள் கோடலும் ஒன்று.

கருத்துரை :—தலைவனுக்கு உரிய பெயரையும் அவன் உறையும் ஊர்ப்பெயரையும் கேட்பதால் மகிழ்கின்ற எம் தலைவியை வருத்தல் தகுமோ? தகாது, (எ-று)

மாதோர் கூறன்.
மாதொர் கூறு, (திருமாளிகைத்தேவர்)
மங்கையோர் கூறுடையான் (சுந்தரர்)
உமையாளை யோர் பால் மகிழ்ந்து (அப்பர்)
மாதொர் கூறர் ,,
மாதொர் கூறுடை நற்றவன் (சம்பந்தர்)
கொம்பன்ன மின்னின் இடையாளொர் கூறன் ,,
மாதொர் கூறனை ,,

வண்டார் கொன்றை

கள்ளினம் ஆர்த்துண்ணும் வண்கொன்றை (திருக்கோவை)
சுரும்புறு கொன்றை .... ,,
தேன்வண்டுறை தருகொன்றை ,,
கள்ளும் வண்டும் அருமலர்க் கொன்றை (திருவாச)
வண்டுபண்பாடுங் கொன்றை (அப்பர்)
வண்டார் கொன்றை ,,
மூசுவண்டார் கொன்றை (சம்பந்தர்)
சுரும்புஅமர் கொன்றை ,,

கொன்றை மார்பன்

கொன்றைத்தார் இருந்தடமார்பு (சுந்தரர்)
கொன்றை மலிந்த வரை மார்பு ,,
அகலத்துப்........பைங்கொன்றைத்தாரடிகள் (அப்பர்)

ஓதில் உய்வன்

வார்த்தை பேசவும் நையும்........நெஞ்சும் (புருடோ)
நயம் பேசும் (சேந்தனர்)
அவர்மாட்டு இசையும் இனிய செவிக்கு (தி. குறள்)
உரையால் தளிர்க்கும் உயிர் (பு. வெ. மா.)

சேதித்தீர்சிரம் நான்முகனை

அயன் சிரங்கள் ஐந்திலொன்றைச் சேதியனை (அப்பர்)
திசைமுகன்றன் சிரம் ஒன்று சிதைத்தார் ,,
நான்முகனர் தலை........அரிந்தது (திருவாச)

மடக்கொடி

இளங்கொடி (கல்லாடம்)

7 கொடியைக் கோமளச் சாதியைக் கோம்பிளம்
பிடியை யென்செய்திட் டீர்பகைத் தார்புரம்
இடியச் செஞ்சிலே கால்வளைத் தீரேன்று
முடியும் நீர்செய்த மூச்சறவே

பதவுரை:— பகைத்தார்-பகைஞரது, புரம்-ஊர், இடிய-பொடிபட, செஞ்சிலை-சைம்மையாகிய வில்லை, கால்-அடியால் (மிதித்து), வளைத்தீர்-வளைத்த பெருமானே, கொடியை-கொடிபோன்ற மெல்லியற்றன்மை யுடையவளை, கோமளம்-அழகில், சாதியை-சிறந்தவளை, கொம்பு-பூங் கொம்பு போன்றவளை, இளம்பிடியை-இளமையாகிய பெண்யானை போன்றவளை, என்-யாது, செய்திட்டீர்-செய்தீர், நீர், செய்த-புரிந்த, மூச்சறவு-உயிர்ப்புநீக்கம், என்று-எந்நாளில், முடியும்-தீரும்.

என்று அருளுவீர் என்பதை மூச்சறவு என்று முடியும் எனக் குறிப்பால் வினயதாம். வளைத்தது மாத்திரமன்றி எய்ததின்று என்பது தோன்ற கால் வளைத்தீர் என்றது. தலைவியின் மென்மை, அழகு, முதலியன தோன்ற கொடி கோமளச்சாதி முதலியன காட்டப்பட்டன. என் செய்திட்டீர் என்றும் நீர் செய்த மூச்சறவு என்றும் வற்புறுத்தியது நீர் செய்த மையல் தீர நீரே விரைவில் வரைவீர் எனும் பொருட்டு.

கருத்துரை:—எம் தலைவியின் மூச்சறவு நீங்க வரையும் நாள் எது? (எ-று)

**கோமளச்சாதி**

கோமளக் கொழுந்து (திருவாசகம்)
கோமள மாது (சம்பந்தர்)

**பகைத்தார் புரம் இடியச்செஞ்சிலை கால்வளைத்தீர்**

வரையென்று ஒருகா லிருகால் வளைய (திருக்கோவை)
மும்மதில்........இடிபட வெய்தெரித்திர் (சுந்தரர்)
முப்புரங்கள் பொடியாகச் சிதைத்தவனே ,,
புரமூன்றும் பொடியாச் செற்ற புண்ணியனே ,,
கடியரணம் பொடிசெய்த (அப்பர்)
வரை கால்வளை வில்லா வளைத்தார் ,,
செருவில் ஒரு கால் வளைய (சம்பந்தர்)
ஒருதனு இருகால் வளைய வாங்கி ,,
ஊர்மூன்றும் இடிய மால்வரை கால்வளைத்தான் ,,
மும்மதில்........இடிபட எய்த பிரான் ,,
ஒருகால் முன்வைத்து இருகால் வளைப்ப (கல்லாடம்)

8 அறவனே அன்று பன்றிப்பின் ஏகிய
மறவனே எனை வாதைசெய் யேலெனும்
சிறைவண் டார்பொழில் தில்லையு ளீர்எனும்
பிறைகு லாநுதற் பெய்வளையே.

பதவுரை:— பிறை-இளஞ்சந்திரனைப் போன்று, குலா-வளைந்த, நுதல்-நெற்றியையுடையவளும் பெய்-இட்ட, வளை-வளையையுடையவளும் ஆகிய எம்தலைவி, அறவனே-புண்ணியனே, அன்று-அந்நாளில், பன்றி-பன்றியின், பின்-பின்னால் (தொடர்ந்து) ஏகிய-சென்ற, மறவனே-வேடனே, எனை-என்னை, வாதை-வருத்தம், செய்யேல்-புரியாதே, எனும், என்பாள். (இஃதன்றி) சிறை-இறகுடைய, வண்டு-தும்பிகள், ஆர்-நிறைந்த, பொழில்—சோலைசூழ்ந்த, தில்லை-சிதம்பரத்தில், உளீர், என்னும்-என்றும் மொழியும்.

தில்லைப்பொழில் வண்டார்வதற்குரியதாயினதேபோல் நின்தோள் எம்தலைவி முயங்க உரியதாம் என்பது குறிப்பு.

நுதலையுடையவளும் பெய்வளையையுடையவளும் ஆகிய எம்தலைவி என்பதேயன்றி, நுதலையுடைய பெய்வளையாள் எனினும், நுதலாளாகிய பெய்வளையாள் எனினும் ஆகும். மறவனாகிப் பன்றிப் பின்சென்று அதை வதைத்த நீர்மைபோல என்னையும் வதைக்கக் கருதற்க என்பது தோன்ற 'பன்றி.........என்னை வாதை செய்யேல்' என்றதாம். பொழில் தில்லை என்றதனால் தலைவனின் செந்தண்மையும் குறிக்கப்பட்டது. அறவனே என்றதனால் வரையுங் கட்டுப்பாடுண்மையில் தவறலாகாமை கூறியதாம்.

**கருத்துரை :—**விளிப்பதோ டமையாமல் தன்னை வருத்தாமையும் வேண்டுகிறாள். (எ-று)

அறவனே

மாட்டூர் அறவா (சுந்தரர்)
அறவனென் பிறவி வேரறுக்குங் கரும்பனை ,,
ஆலின் கீழுரைத்த அறவனை ,,
திருவாவடுதுறையுள் அறவனே, ,,
அறவனா ரடியா ரடியார் (அப்பர்)
அறவ னெம்பிரான் ,,
உய்யக் கொண்ட அறவா ,,
இறைவன் அறவன் (சம்பந்தர்)
அத்தன் அறவன் ,,
அறவன் ஆரூர் ,,
அறவன் அன்னியூர் ,,
அருத்தனை அறவனை (சம்பந்தர்.)
அறவா என வல்வினை யாசறுமே ,,
அறவன் சேவடி ,,
அறவுரு வேதநாவன் ,,

**அன்று பன்றிப்பின் ஏகிய மறவனே**

பன்றிப்பின் சென்று நின்ற மறவா (திருமாளிகைத்தேவ)
மறவனா ராயங்கோர் பன்றிப்பின்போவது (சுந்தரர்)
மறவனை அன்று பன்றிப் பின்சென்ற ,,
மறவனைப் பன்றிப் பின்சென்ற (அப்பர்)
போரேனம் தனைத்தேடிப் புறப்பட்டான் (வி. பு. பாரதம்)
வெங்கிராதனாகிய வடிவுகொண்டகிரீசன் ,,
வேணிமுடிவேடன், அபிராம எயினன்,
செய்ய சிவவேடன், ,,
நாதனமலன் சமரவேட வடிவம்
எயின வேடமாய் வீழ்த்தினேன் ,,
அறுகும்...........கரந்தொரு கானவனாகி (கல்லாடம்)

கேழற்பின் வேடனும் பாவகம் (சம்பந்தர்)
காட்டகத்து வேடன் (திருவாசக)

சிறைவண்டார் பொழில் தில்லை
சிறைவண்டு........தேதே எனுந்தில்லை (திருக்கோ)
சிறையணி வண்டறையுந் தில்லை (திருவாலியமுதனார்)
வண்டறையுஞ் சோலைமல்கு சிற்றம்பலம். (அப்பர்)
வண்டு பண்பாடும் சோலைமல்கு சிற்றம்பலம் ,,
சிறைவண்டறை ஓவாச் சிற்றம்பலம் (சம்பந்தர்)

பிறை சூலா நுதல்
பிறைகொள் வாள்நுதல் (திருக்கோவை)
இளமதி நுதலி (சம்பந்தர்)
சிறுமதி நுதல் (கல்லாடம்)
பிறை நுதற் கன்னி ,,

எனை வாதை செய்யேல் எனும்
எனைநீ நலிவ தென்னே என்னும் (தி. மா. தேவர்)
வாதை தீர்த்திடும் (அப்பர்)
வாதையுறு பிணியைத் தீர்க்கும் மருந்தவன் (அப்பர்)
அலசாமல் நல்காய் எனும் (சம்பந்தர்)

9 அன்ற ருக்கனைப் பல்லிறுத் தானையைக்
கொன்று காலனைக் கோளிழைத் தீரெனும்
தென்ற லார்பொழில் தில்லையு ளீரிவள்
ஒன்று மாகிலள் உம்பொ ருட்டே

பதவுரை:— தென்றல்-தென்றற்காற்று, ஆர்-நிறைந்த, பொழில்-சோலை (சூழ்ந்த) தில்லை சிதம்பரத்தில், உளீர், இவள், உம்பொருட்டே-உமக்காகவே (மையல் கொண்டாளாகலின்) ஒன்றும்-(உண்டி உறக்கம் ஆகிய) எதும், (செய்யும் கருத்துடையாள்) ஆகிலள்-ஆயினாளில்லை; அன்று-அந்நாளில், அருக்கனை-சூரியனை, பகல், இறுத்து-ஒடித்து, ஆனையை—வேழத்தை, கொன்று-கொலைசெய்து, காலனை-யமனையும், கோள்-கொலை, இழைத்தீர்-செய்த பெருமானே, எனும்-என்று சொல்லும்.

முன்னும்(பாட்டு 4) ஒன்றாகிலள் என்பதேபோல் ஒன்றும் ஆகிலள் என்றதாம். தென்றலார்பொழில் தில்லையுளீர் என்றது அத்தென்றலுக்குத் தலைவி வாடாமை புரிக எனும் பொருட்டு. ஏகாரம் பிரிநிலை. காலனையும் என்ற உம்மை தொக்கது. உம்மை எச்சம். சிறப்பும் ஆகும். அருக்கன் பல்லை எனப் பிரித்துக் கூட்டலும் ஆகும்.

கருத்துரை:— உமது மையலால் வேறு ஒன்றும் ஆகிலள். ஆகவே வரையாவிடின் சாக்காடுறும். (எ-று)

அருக்கனைப் பல்லிறுத்து
அருக்கன் எயிறு பறித்தல்பாடி (திருவாச)
வெஞ்சுடரோன் பல்லிறுத்த வேந்தே (அப்பர்)
பரிதியான் பல்லும் இறுத்தவர் (சம்பந்தர்)

காலனைக் கோளிழைத்தீர்
தெறுவலக் காலனைச் செற்றவன் (திருக்கோவை)
காலனை உயிர் வீட்டினீர் (சுந்தரர்)
சாடிக்காலன் மாள (சம்பந்தர்)
கூற்றந்தன்னை மாள்வித்தவனை ,,
அடுதிறற்காலனை அன்றடர்த்து (அப்பர்)

தென்றலார் பொழில்
தென்றல் மணம் கமழும் (சுந்தரர்)
தென்றல் புகுந்துலவும் ,,
தென்றல் துன்றும் பொழில் (சம்பந்தர்)

10 ஏயு மாறெழிற் சேதிபர் கோன்தில்லை
நாய னாரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
ஆய இன்பமெய்தி யிருப் பாரே

பதவுரை :—தில்லை-சிதம்பர, நாயனாரை-நாதனை, எழில்-அழகு பொருந்திய, சேதிபர்-சேதி நாட்டவர்களுக்கு, கோன்-இராயர், ஏயும்-பொருந்தும், ஆறு-விதம், நயந்து-விரும்பி, உரைசெய்தன-பாடப்பட்ட பாக்களை, தூய-குற்றமற்ற, ஆறு-முறையில், உரைப்பார்-சொல்லுவோர், துறக்கத்திடை-பொன்னுலகில், ஆய-(உள்ளது) ஆகிய, இன்பம்-நலனை, எய்தி-அடைந்து, இருப்பர்-(நிலைத்து) வாழ்வர்.

எழில் என்பது நாட்டின்அடை, துறக்கத்திடைஆய இன்பம், பொன்னுலக வாழ்க்கையாலாகிய மகிழ்ச்சி.

கருத்துரை:— இத்திருவிசைப்பாவை ஓதுவார் துறக்கம் பெறுவர். (எ-று)

தில்லை நாயனார்
சிராப்பள்ளி மேவிய நாயனார். (அப்பர்)

முற்றிற்று

---

# வள்ளல் மலையமான் திருமுடிக் காரி

(ஒரு சிறு நாடகம்.)

திரு. சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள்
தலைமையாசிரியர், கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரி, தஞ்சை

(முற்றொடர்ச்சி துணர் 14, மலர் 11, பக்கம் 439)

## இயல்—ச.

உறுப்பினர் :—மலையமான்-திருமுடிக்காரி; ஒற்றன்-மறைமாடன்; சேரர்படைத்தலைவன்-பிட்டங்கொற்றன்; பெருமக்கட் குழுவினர்; கடியநெடுவில்லி.

இடம் :—திருக்கோவல் நகர்ப்புறத்துற்ற ஒரு மன்றம்.

பொழுது :—பிற்பகல்.

[மலையன், சேரனது வலியால் அதியனை வென்று அரசு பெறுதல்.]

மலையமான் :—[உட்புகும் ஒற்றனிடம்] வருக மறைமாட; என்ன ஆயிற்று? நமது வெற்றிநிலை எவ்வாறுளது?

மறைமாடன் :—பெருமை மிக்க மன்ன! கவலற்க. நலமே விளைந்தது; வெற்றியும் நம்மதே. நஞ்சேரர் படைக்கு ஆற்றாது, மதிற்புறவாயிலை அடைத்து, அன்று தகடூர்க்குள் தயங்கியிருந்ததே போன்று, இன்றும் அதியன் நம் இரும்பொறையினது இகலுக்கஞ்சி நின்றனன். மேலும் அவனது கரிகளும் பரிகளுங் காலோய்ந்தன; படைஞரோ சேரர்முன் வீரமற்று வீழ்ந்தனர். வீரருள் வீரனைய அவ்வஞ்சி இன்று புலி முன் நின்ற புல்வாய் போற் கலங்கினன். யானும் இஃதோர் உண்மைக் காட்சியாமோவென மருண்டேன். வள்ளலே! நஞ்சேரமானது கூரிய அம்புக் கிலக்காகி, மண்மகட்குத் தன்னுடம்பீந்து, பொன்னிலக் கன்னியர் போற்ற, விண்ணக வாழ்வை விரும்பி, இன்றே ஏகினன் அந்நெடுமானஞ்சி.

மலையமான் :—ஆ! (வியப்பு மேலிட) அதியனும் மாண்டனன்! ஆம், ஆம்: தீவினை! இம்மண்ணகக்கூத்தில் அவன் இனி

மனமற்றான் போலும்? என்னே, இம்மாநிலவாழ்வு! பாண்டவரைவரும் கவுரவர் நூற்றுவரும் அன்று நிகழ்த்திய மாபெரும் போர் நமக்குத்தந்தது என்? இந்நிலமக்கள் தன்மக்களையிழக்கவும் அம்மக்கள், தம்முறவினர் பிரிவால் வருந்தவும் தொன்னிலையுற்ற திங்கண்மரபு கொடிவழியற்றுக் குலையவுமே யன்றிப் பிறிதொன்றுங்காண்கிலேம். இன்றும் என்பொருட்டாயெழுந்த போரும் அளவு, திறன், முறை இவற்றால் மாறுமே யாயினும் முடிவினில் அப்பெரும் பாரதப் போரையே தழுவுகின்றது. அந்தோ? நெருநற்போரில், எனது நலத்தையே உன்னி, என்போன்ற ஒருநாட்டுத்தலைவனும், கொடை மடங் கைக்கொண்டவனும், குடிமக்களனைவரும் தம்முயிரெனப் போற்றி வாழ்த்து முறையாற் பயிலும் கொற்றவனும், கொல்லிமலைக் காவலனும் ஆய, வள்ளல் வல்வில்-ஆதன்ஓரியை, எனது புல்லிய கைகளாற் கொன்று ஒரு வள்ளன்மை மிக்கானின் வாழ்வினை ஒழித்தேன். ஐயகோ! இன்று, தன்னலன்வெறுத்து, தன்னுயிரிடத்தும் அன்பின்றி, தான் அரிதிற் பெற்ற உண்டவரை நெடுநாள் வாழ்விக்கும் ஓர் உயரிய இனிய நெல்லியங்கனியை ஔவைக்குநல்கி, அழியாப்புகழ்பெற்ற அவ்வதியமான் நெடுமான் அஞ்சி, என்பொருட்டு, என்நண்பன் இரும்பொறையினது கூரிய அம்பு, தனது வலிய நெடு மார்பைப்பற்றி அருவியெனக்குருதி கொப்பளித்து அணிசெய, தனது மண்ணக ஆட்சியை வெறுத்து விண்ணக வீரஆட்சி எய்தினமையால், இத்தமிழகம் ஒப்பற்ற மற்றொருமணியை இழந்தது. முடியுடைய மூவரும் முற்றினும் முடியாவன்மைபெற்றிருந்த வல்வில்ஓரியும் அதியனஞ்சியும் தந்நலம்பேணாத் தன்மையரன்றோ? வறியார்க்கீவதும் எளியாரின் இன்முகங் காண்பதும் தம் பெருநோன்பாக்கொண்டு வாழ்ந்த அவ்விருவரையுங் கொன்று, யான்மட்டும் எழினலம்பெற அரசு கட்டிலிலமர்ந்து ஆட்சிமுறைசெலுத்தல் அழகாமோ? ஆ! அன்பின் வடிவாய ஆண்டவ! எனது குற்றம் பொறுத்து எளியனைப் புரத்தல் நின்பரம். எனது உளக்கலக்கம் நீக்கி, என்பால் அமைதி நிலவ அருளுக.

மறைமாடன் :—பீடுடையபெரும! உலகியலறிந்த தாங்கள், அதனை மறந்து உளம் பொருந்தாவுரை பலநவிலுதல் ஏற்புடைத்தன்று. 'அரசியல் பிழைத்தார்க்கு அறங் கூற்றாவது' அறநெறியன்றோ? தன்னிலையினின்றுந்தவறினால் எவனும் இடர்ப்படாதிரான்; அவன் உயிரொழியத் துயருழந்தழிவன் என்பது பொய்க்காது. அண்ணலே! அதியன் அன்று தகடூரைப்பற்றித்

தனியாட்சி பெற்றதை எவரேனும் தடுத்தனரோ? நம்மலைய மானுடு அவற்கு அப்போது என்ன தீங்கு இழைத்தது? இவை நாடாது, தமிழகத்தே தாய்மை பெற்றோங்கிய தங்களை நாட்டினின்று மோட்டியது நலமாமோ? மற்றும், தாங்கள் ஒரு புறமும், தங்கள் காதன்மிகு கற்பின் கொழுந்தாய எம் அன்னை யார் மற்றொருபுறமும் எம்நாட்டின் இளஞாயிறும், மதிதவிழ் மலர்முகம்பெற்ற முருகனுமாய எம் இளவரசராகும் தங்களது மக்களிருவரும் வேறொருபுறமும் உயிருக்கே அஞ்சி, களை கணற்று, கவலைமேற்கொண்டு கலுழ்ந்து நிற்கச்செய்த கொடும் பழிகள் யாவும் வீணாகுமோ? திக்கற்றார்க்குத் தெய்வமன்றோ துணை நிற்கிறது.

**காவலன்:**—(வணக்கத்துடன்) எம்இறைவ! நம் படைத் தலைவர் கடியநெடுவில்லியும் சேரமான் படைத்தலைவர் பிட்டங் கொற்றனும், பலகுடிமக்களும் படைவீரருஞ்சூழ, வெற்றிக் கொடிபறக்க விரைந்திவண் வருகின்றனர்.

**மலையமான்:**—அவர்கள் வரவு எவர்க்கும் நலனைத்தருக. (அனைவரும் புகுதல்) வருக எம் பிட்டங்கொற்ற, வருக, வருக! படைவீரர்காள், குடிமக்களே! உங்களனைவருக்கும் என் அன்பு கலந்த நல்வரவேற்பு அமைக. (யாவரும் வணங்குதல்)

**பிட்டங் கொற்றன்:**—வெற்றி மிகு வாகையணி வள்ளால்! மலையமாநாட்டுக் கோவே! நினது செங்கோன்மையால் நினது புகழோங்குக. வணக்கம். மலைய! எம்மன்னர் மன்னன் சேர மான் இரும்பொறை, தொன்மை பெற்றுயர்ந்த முடி-மூவேந்தர் தம் முறைதவிராநெறிக்கு எவ்வகையானு மிழுக்கு நேராதவாறு காக்கவும், பண்டு நடந்த பாரதப்போரில், மற்றைய மன்ன ரொப்பப்படைத்துணை போயதோடமையாது பசிப்பிணியாற் கலங்கிய அனைவர்க்கும் பகைவர், துணைவர் என்ற பாகுபாடின் றிச்சோறிட்டு, நீர் கொடுத் துதவிய, 'பெருஞ்சோற்றுதியன்' கொடிவழிக்கு நொடிநிலைவாராது தடுக்கவும், நாடு தவிர்ந்தேகிய அன்று நின்பாற் கூறிய மொழிக்கு ஊறுபாடுறாதவாறு நிற்க வும், மற்றும் கொல்லிமலைநாட்டைப் பெறுமாறு நீ அவருக் காற்றிய பேருதவியைப் போற்றவும் உளம்பற்றி, உற்ற கடனுள் ஒருசிறிதும் வழுவாது, இயன்றவரை புரிந்த அவர்தம் பெருவினைத்துணையை ஏற்றுமகிழ்வாயெனக் கருதுகின்றேம்.

**மலையமான்:**....சேரமானது சினப்படை நடாத்தும் பீடமை பிட்டங்கொற்ற! வாழ்க நீ பல்லாண்டு. பொருந! பால்

வேண்டாப் பூனையும் பழம் விரும்பாக் கடுவனு முண்டோ? அரசு பறிகொடுத்து அலந்துநின்ற எனக்கு 'எற்றுக்கோடல்' என்ற முறையும் வேண்டுமோ? என் முன்னோராற்றிய நோன் பின் பயனால் என்பாலிரங்கி, பொருட்செலவு, உடல்முயற்சி, துயர்ப்பெருக்கம் ஆய பலவு மேற்கொண்டு யானிழந்த நாட்டை இன்று மீட்டுத் தந்தருளிய தங்கள் தலைவரும், என் பெருஞ் சேரருமாய இரும்பொறை மன்னர்க்கு, யான் என்றுங் கடமைப் பட்டுள்ளேன். மற்றும், அவர் எனக்காக ஆற்றிய பெருஞ் செயல்கள் யாவையும் எனதுள்ளத் திருத்தி எழுமையும் போற்று வேன். இஃதுறுதியே.

**பிட்டங்கொற்றன் :—**மாண்புமிக்க மலைய! நினது அன்பினை அறிவேம். எம் வேந்தர் என்றும் நின் அன்பர்: நினது வாழ்வில் கருத்துடையர்: நினது வலியைப் புகழ்பவர்: பொய்மிடையா நினது பொன்மொழிகளைத் தனது உய்வகையாக்கொண்டு உளத் திற்பதிப்பவர். எம் சேரர்கோனது நாடும் நினது மலையமா நாடும் இனி ஒன்றுபட்டன. இவ்வொற்றுமை மிக வலியது. நம்மை வெல்ல எவராலும் இனி இயலாது.

காரி மன்ன! எம் சேரமான் எம்மை நின்பாலனுப்பியதை யறிக. யாம் வந்தமை, தகடூர்-அதியமானஞ்சியை விழுப்புண் படுத்தி வீழ்த்திய இன்றே, இம்மலைய நாட்டரசியலை நின்பா லமைத்தற்கேயாகும். நின் ஆட்சிக்குரிய மணிமுடியும் கொற்ற வாளும் ஈண்டுள. எம் சேரரது கருத்துக்கிணங்கி, இன்னே முடிசூட்டு மங்கலம் நிகழ உளம் கொள்க.

ஈண்டுக் குழூமியுள பெருமக்களே! இன்று முதல் நம்மலைய மான் திருமுடிக்காரியினது வாழ்வு பல்லாற்றானுஞ் சிறப்புறவும் சேரமாநாட்டுக்கும் மலையமாநாட்டுக்குமுள்ள தொடர்பு ஓங்கவும் தமிழன்னையினது தாள்தொழுது, நம் காரிக்கு இத்திருமாமணி முடியினைச்சூட்டி மகிழ்வோமாக.

[பிட்டங்கொற்றன் முடிசூட்ட, கடியநெடுவேல்லி வாட்படை வழங்கல்.]

**மறைமாடன் :—**மலையமாநாட்டு மாண்புமிகு தலைவர், எம் திருமுடிக்காரிவேள், வாழ்க!

**பெருமக்கள் :—**வாழ்கவே!

**பிட்டங்கொற்றன் :—**திருமகள் அவாவுந் திருக்கோவலூரை யும் கருமுகில் தவழும் முள்ளூர் மலையையும்பெற்ற மலாடுடைய

மன்ன! நினது கொற்றம் ஓங்குக! இன்று தொட்டு இந்நாட்டவர் அனைவர்க்குமுரிய அன்னை, தந்தை, ஐயன், மன்னன், இறைவன் ஆய யாவும் நீயே யன்றோ? எனவே, நின் மாற்றலருடன் மருவி வாழ்ந்த எவரேனும் இன்று காணப்படுவராயின், நீ அவரிடத்தும், அவர்தம் பழவினைமேற் கருத்தின்றி அன்பாயிருத்தலே அறனும். இணக்கமிலாதிருந்தவர்பால், ஒருவன் தனக்கு வலிமை மிகுந்த நாளில் பெருந்துயர் தருதல் இழிவுடையதாகும். அஃது அவனது அறியாமையால் வளர்க்கப்பெற்ற பண்பிலா வாழ்வையே உணர்த்தும். ஆதலால், இன்சொல், தீநெறி படராச்செயல், அறநினைவு ஆய இவைபெற்றோர் என்றுங் கீழ்மையறியார் என்பது திண்ணம்.

வள்ளால்! பொய்யில் புலவனின் பொருளுரை தேறிய நின்பால், யாம் மற்றும் கூறவேண்டுவதின்று. நீ, நெடிது வாழ்க; நினது கோல்நிறை இஞ்ஞாலங்காக்க : நின்னைப்புகழ்ந்து பாடுவாரது வறுமை நீறுபட்டொழிக; நினது நாடு, நீர் நில வளப்பங்கள் சுரப்ப அமைக; நின் குடிகள், கல்வியுஞ் செல்வமும்பெற்றோராய், பசி, பிணி, பகையின்றி அருண்மேவிய பெருந்திருவினராய் வாழ்க; நீயும் நின் சுற்றமும் திருவருட்டுணையால் எல்லா நலனும் எய்தப்பெற்று பல்லாண்டு, பல்லாண்டு வாழ்வீராக.

கடிய நெடுவேட்டுவன் | குடிமக்கள்
--- | ---
நம்மன்னர் மன்னன், சேரமான் இரும்பொறை! | வாழ்க!
சேரமான் படைத்தலைவர், பிட்டங்கொற்றனார்! | வாழ்கவே
நம்மன்னர் பெருந்தகை, மாபெரு வள்ளல், மலையமாநாட்டுத் திருமுடிக்காரிவேள்! | வாழ்க, வாழ்கவே!!

காட்சி முடிவு

முற்றும்

வாழிபல ஊழிதொறும் வாழி தமிழன்னாய்
மைந்தரொடுந் தொண்டரொடும் வாழி தமிழன்னாய்

இச் சிறுநாடகம், 12—4—1937 ஆம் நாளன்று திரு. S. இராமலிங்கசாமி நாட்டாரவர்கள் (B. A., B.L., தஞ்சை) தலைமையில் நடந்த கரந்தைத் தமிழ்ச் சங்கக் கல்லூரியின் இருபதாவது ஆண்டுவிழாவினில், அக்கல்லூரி ஆசிரியர்கள் திருவாளர்கள், பீ. இலக்குமணாச்சாரி, கோ. இரத்தினம் பிள்ளை ஆய இவர்கள் தந்த பயிற்சியால் க. த. ச. கல்லூரி மாணவர்களால் திறம்பட நடிக்கப்பெற்றது. இஃதெழுத-புறநானூறும், மதுரை, திரு. பண்டித. ஆ. கார்மேகக்கோனாரவர்களது நல்லிசைப் புலவர் வரலாறும் துணையாயின.

# முற்கால, தற்காலக் கல்விமுறை

## பண்டிதமணியின் சொற்பொழிவு

அண்ணாமலைநகர் தமிழ்ப்பண்டிதர்,
திரு. மு. அருணாசலம் பிள்ளை அவர்கள் எழுதியது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர், பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியாரவர்கள், 18—11—38 வெள்ளிக்கிழமை பிற்பகல் 5 மணிக்குக் கோகலேமன்றத்தில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு:—

கல்வியென்பது, ஒருவர்க்கு ஊழ்வயத்தான் இயற்கையின் அமைந்துள்ள அறிவை, ஆன்றோரான் ஆக்கியருளிய நூற் பயிற்சியாற் பண்படுத்தி விளக்கமுறச்செய்து கொள்ளுதலே யாம். நூலறிவாகிய செயற்கை யறிவு கைவரப் பெறாதார், எத்துணை நுணுகிய இயற்கை யறிவுடையராயினும் அவர் எல்லோரானும் நன்கு மதிக்கப்படாரென்பது ஒருதலை. இது பற்றியே திருவள்ளுவரும், "மதிநுட்பம் நூலோடுடையார்" என்று கூறினர். கல்வியே, அன்பு, அருள், ஈகை, தவம், இன்பம் அனைத்திற்கும் மூலகாரணமென்பதைத் தசரதனைப் புகழ்ந்து கூறுமுகமாக, "ஏகம் முதற்கல்வி" என்று தொடங்கும் பாடலில் கம்பரும் விரித்துரைத்தார்.

இனி, எடுத்துக்கொண்ட கல்விமுறைபற்றி:—கற்பிப்பார், கற்பார், கல்வியினியல்பு, கற்றதன் பயன் எனப்பகுத்து அந்நான்கினையும் முற்காலத்தொடும் தற்காலத்தொடுங் கூட்டிச் சிறிது ஆராய்தல் வேண்டும். பண்டைக்காலத்துக் குருகுல வாசஞ்செய்து கல்வி பயிறலே சிறப்பாகக் கருதப்பட்டுவந்தது. குருகுலம் என்பது ஆசிரியன் இல்லம் எனப் பொருள்படும். பெருஞ் செல்வக் குடியிற் பிறந்த அரசகுமாரர்களும் ஆசிரியன் இல்லத்தையடைந்து அவன் குறிப்பின் வழியொழுகி வான் முறையாக கல்விபயின்று அவனுடைய ஒழுக்க வழக்கங்களைத் தாமும் மேற்கொண்டு வரலாயினர். அவ்வாசிரியர்களும் மாணவர்களைத் தம் மக்களாகவே கருதி அவர்களுடைய கல்வி யறிவு ஒழுக்கம் இவற்றைப் பேணுதலினும் உடற்பாதுகாப் பினும் கண்ணுங் கருத்துமாயிருந்து வந்தனரென நூல்களால் அறிகின்றோம். தத்துவ ஞானியாகிய சனக மகாராசனுக்கு,

இராமலக்குமணர்களை அறிவிக்கப் புக்க விசுவாமித்திரமுனிவர் "தயரதன்றன் புதல்வரெனும் பெயரேகாண், மறையோதுவித்திவரை வளர்த்தானும் வசிட்டன்காண்" என்றார். இதனால், வேதமுதலிய கலைகளனைத்தையும் கற்பித்த அளவின் அமையாது அவர்களுடைய உள்ளத்தையும் ஒழுக்கத்தையும் சீர்படுத்தி உடலை வளர்த்தவனும் வசிட்டரேயென்பது புலனாகின்றது. அன்றியும், பண்டைக்காலத்து ஆசிரியர்கள் தாங்கற்ற கல்வியை உலகுக்கு உபகாரமாக நன் மாணாக்கர்க்கு அறிவுறுத்தலே பெரும்பயனாகக் கருதினாரல்லது பொருளைக் கருதினாரல்லர் என்பதை இரகுவமிசம் என்னும் நூலால் அறியலாம்.

இனி, கற்பிப்பாராகிய ஆசிரியர் முற்காலத்து எவ்வாறிருந்தனரெனின், "வலம்புரிமுத்திற் குலம்புரி பிறப்பும், வான்யாறன்ன தூய்மையும் வான்யாறு, நிலம் படர்ந்தன்ன நலம்படரொழுக்கமுந் திங்களன்ன கல்வியுந் திங்களொடு, ஞாயிறன்ன வாய்மையும் யாவதும், அஃகா அன்பும் வெஃகாவுள்ளமும், துலைநாவன்ன சமநிலையும்" ஆகிய எண்வகைக் குணங்களையும் தமக்கு உறுப்பாக்கொண்டு, உயர்குடிப் பிறப்பாகிய வுடையுடுத்து, ஆராய்ச்சியறிவென்னும் மாலைசூடி, ஒழுக்கமென்னும் விழுக்கலன்பூண்டு, உண்மையென்னும் உண வுட்கொண்டு, தூய்மையென்னும் இன்பத்துத்திளைத்து, நடுவு நிலையென்னும் நகரத்திருந்து, அழுக்காறின்மை அவாவின்மையென்னும் இரு பெருந்திருவும் மருவியிருந்தனர். அதனால் அவர் மக்களால் கடவுளரை யொப்பக் கருதப்பட்டு வந்தனர். இற்றைநாளில், அவ்வியல்புகட்கு மாறாக ஆடையணிகலங்களால் தம்வெற்றுடலை அழகுபடுத்துதலே சிறந்த முறையாகக் கருதப்பட்டுவிட்டது. இதனால், ஆசிரியர்களைக் குறை கூறியதாகாது. கற்பிப்பார் கற்பாராகிய இருதிறத்தாருடைய நோக்கமும் புறவழகிலேயே பெரும்பாலும் ஈடுபட்டுள்ளது என்பதேயாம். மேற் கூறப்பட்ட இயல்புவாய்ந்த ஆசிரியர்களையே தேர்ந்தெடுத்தமைப்பது முன்னையவழக்கம். இந்நாளிலோ, ஆசிரியர்களை நேரிலும் பாராமல், தகுதிச் சீட்டும், சான்று பகர்வார் கைச்சாத்தும் ஆகிய கடிதங்களையே பார்த்து நியமனஞ் செய்து விடுகின்றனர். அவ்விருவகைக் கடிதங்களும் உண்மையாக அவருடைய கல்வியறிவையும் குண நலங்களையும் அளந்து காட்டுவனவாயில்லை. இம்முறைகளால் தேர்ந்தெடுக்கபட்ட ஆசிரியர் நூற்றுவரில் ஒருவர் இருவராயினும் உண்மையான ஆசிரிய இலக்கணம் அமைந்திருத்தல் அரிதாகின்றது. இக்காலத்திய ஆசிரியர்கள்

மனப்பான்மையும் மாணவர்களின் அறிவொழுக்கங்களை வளர்த்தலிற் செல்லாது பொருளிலும் குறிப்பிட்டமணி நேரத்திலுமே செல்லுகின்றது.

அடுத்தபடியாக, கற்பவராகிய மாணுக்கரும் முன்னுளிற்போல ஆசிரியர்க்கு அடங்கியொழுகி உண்மையாக அறிவை வளர்த்து உலகிற்குப் பயன்படுத்த முயலாது "மொழிவதுணராதார் முன்னிருந்து காய்வார், படிறு பலவுரைப்பார் பல்கால் நகுவார்" என்று கடியப்பட்ட குற்றங்களையுடையராய், ஆசிரியர்களைத் தம் கருத்தின் வழியொழுகச்செய்து, தகுதிச் சீட்டுப் பெற்றுப் பதவியெய்துதலாகிய குறுகியநோக்கமே குறிக்கோளாகக்கொண்டு பலகலைத்துறையினும் வாய்வைத்துஒன்றனிடத்தும் அறிவு நிரம்பாமல் ஒருசிறிது கற்ற கல்வியையும் தீயவழியில் செல்லவிடுகின்றனர். அடங்கிநடவாமையால் அவரெய்தும் பயன் மிகமிகக் குறைவேயாம். ஆடவரும் மகளிரும் ஒருங்கே கல்வி பயிலுதல், இருதிறத்தாரும் உலகியலை யறிந்துகொள்ள வுதவுவதாகும் என்றஎண்ணத்தால் அங்ஙனம் பயில்விக்கப்படுகின்றனர். ஆயினும் அவ்விருபாலருக்கும் உண்ணுமிடமும் உறையுமிடமும் வெவ்வேறாகவே யமைந்துள்ளன. இதனாலேயே ஒழுக்கம் பாதுகாக்கப்படுதல் இன்றியமையாததென்பது புலனாகும். நிற்க. ஒருவன் ஆசிரியர் துணைகொண்டு கற்ற கல்வியால் காற்கூறு புலமையே பெறுதல் கூடுமென்பதும், கற்றாருடன் பழகுதலாலும் பிறர்க்கு எடுத்துரைத்தலாலும் ஏனைய முக்காற் கூறும் எய்தப் பெறுவானென்பதும் நம் முன்னையோர் கண்ட முடிபாம். ஆகவே, தகுதிச்சீட்டு பெறுதல், தான் கற்ற நூல்களின் எஞ்சிய பாகங்களையும் கல்லாத நூல்கள் பலவற்றையும் தன் முயற்சியால் ஒருவன் கற்றுணர வழிகாட்டியதேயாம். இங்ஙனங் கருதாது சில ஆண்டுகள் கல்வி பயின்று பட்டம் பெற்ற மாணவர்கள் அவ்வளவிலேயே தம் புலமை நிரம்பியதாகக் கருதித் தருக்கித் திரிகின்றனர்.

இனி, கல்வியின் இயல்பு எத்தகையதாதல்வேண்டும் என்று பார்க்கலாம். "அறம்பொருளின்பம் வீடடைதல் நூற்பயனே" என்றபடி அறமுதலிய உறுதிப் பொருள்களைத் தருவதாய், இம்மை மறுமை வாழ்க்கைக்குத் துணைசெய்வதாய், உயிர்க்கு உறுதி பயப்பதாயிருத்தல்வேண்டும். அத்தகைய நூல்களைக் கற்குங்கால், தான்வேறுஅவைவேறாக இன்றிஒற்றுமைப்பட்டு உணர்ந்து படித்தல் வேண்டும். சீவகன் கல்விகற்ற முறையைக் கூறுங்கால், "நாமகள் நலத்தையெல்லாம் நயந்

துடன் பருகி நன்னூல், ஏ முதலாய எல்லாப் படைக்கலத் தொழிலு முற்றி'' என்று குறிப்பிட்டுள்ளமையால் இலக்கிய இலக்கணங்களும் தனுர்வேதத்திற் கூறப்பட்ட படைக்கலப் பயிற்சியும் தொழிற்கல்வியும் வான்முறையே கற்றதாக அறி கின்றோம். பின்னும் சீவகன் அவ்வளவின் அமையாது அவ் வாசிரியன்பால், உயிர்க்கு உறுதிபயக்கும் தத்துவப்பொருள் உணர்ச்சியும் பெற்றானென்பது,

> ''அறிவினாற் பெரிய நீரார் அருவினை கழிய நின்ற
> நெறியினைக் குறுகி யின்ப நிறைகட லகத்து நின்றார்
> பொறியெனும் பெயர வைவாய்ப் பொங்கழ லாவின் கண்ணே
> வெறிபுலங் கன்றி நின்றார் வேதனைக் கடலுள் நின்றார்.''

என்பது முதலிய பாடல்களால் தெரியவருகின்றது. குருகுல வாசம்போல் ஆசிரியர் மாணவர் அனைவரும் எப்பொழுதும் ஒருங்கிருந்து நல்லனபலவற்றையும் அளவளாவி ஆராய்ந்து நன்னெறிப்படுதல் வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் நம் பல்கலைக்கழகமும் நிறுவப்பட்டுள்ளது. அந்நோக்கம் இனி நிறைவேறுதல்வேண்டும். மாணவரொருவர் ஓர் ஆசிரியர்பால் நெருங்கிப் பழகுகின்றாரென்றால், தம்தேர்ச்சிகுறித்தோ அன்றி வேறோர் உதவிகருதியோ நெருங்குகின்றார் என்றுதான் எண்ண இடமேற்படுகின்றது.

முடிவாகக் கல்வியின் பயன் யாதோவெனின் கற்றபடி நன்னெறியில் ஒழுகுதலேயாகும். அவ்வொழுக்கமின்றேல் கல்வி யாற்பயனில்லை. திருவள்ளுவரே, கல்வியையும் ஒழுக்கத்தையும் பற்றிக் கூறுமிடங்களில், ''எண்ணென்பவேனை யெழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழுமுயிர்க்கு.'' என மக்களுயிர்க் குக் கல்வியைக் கண்ணாகவும், ''ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்'' என்பதனால் ஒழுக்கத்தை உயிரினுஞ் சிறந்த பொருளாகவுங் கூறியுள்ளார். கண் உடம்பின் ஏகதேசமாகியதோர் உறுப்பு. அதனை யங்கமாகக் கொண்டது உடல். அவ்வுடம்பின் வேறாய் என்றும் நின்று நிலவுவது உயிர். அவ்வுயிரினுஞ் சிறந்தது ஒழுக்கமென்று தெய்வப்புலவர் தெரிவிப்பாராயின் கல்விக்கும் ஒழுக்கத்திற்கும் உள்ள ஏற்றத்தாழ்வு இவ்வளவென்பது நமக்கு நன்கு வெளியாகின்றதல்லவா? கண் இன்றியே அரசியற் கருமங்களும் புலமைத்தொழிலும் நடாத்திய பலர் வரலாறுகள் கேட்கப்படுகின்றன. அறிவுதிரு ஆற்றல்களாற் சிறப்புற வாழ்ந்தோரும் ஒழுக்கந் தவறிய அன்றே தம் உயிர்க்கிறுதி தேடிக் கொண்டாரென்று தானே யறிகின்றோம். அன்றியும், கல்வியிற் பெரியராய கம்பரும்:—

" நீதியி னின்றீர் வாய்மை யமைந்தீர் நினைவாலும்
மாதர்ந லம்பே ணாதுவ ளர்ந்தீர் மறையெல்லாம்
ஓதியு ணர்ந்தீர் ஊழிக டந்தீர் "

என அநுமனைச் சாம்புவந்தர் புகழுமுகமாகக் கூறுமிடத்தில், நீதி, வாய்மை நினைவாலும் மாதர் நலம்பேணாது வளர்தல் என்னும் இவைகளை முன்னர்க் கூறியன்றோ பின்னர் மறை யெல்லாம் ஓதியுணர்தலைக் குறிப்பிடுகின்றார். அல்லாமலும் பிரமசரிய விரதமாகிய ஒழுக்கந் தவறாமையே அநுமனது உடல் வளர்ச்சிக்கும் வாணாள் வளர்ச்சிக்கும் ஏதுவென்பதும் அப்பாட லால் வெளியாகின்றது. தில்லைவாழ் அந்தணர்களுடைய அறி வொழுக்கங்களைக் கூறப்புகுந்த சேக்கிழார் பெருமான், அவ் விரண்டனுள்ளும் தலையாயது ஒழுக்கமென்பது கருதியன்றோ "நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் துறைபோனார்" என்று ஒழுக்கத்திற்கே முதலிடங் கொடுப்பாராயினர். இது காறுங்கூறியவற்றால் கல்வியின்பயனாயஒழுக்கம் அக்கல்வியினும் எத்துணையோ மடங்கு மேம்பட்டதெனவும், கல்வி பயிலும் மாணவர்கட்குப் பிரமசரியங் காத்தலாகிய நல்லொழுக்கம் மிகவும் இன்றியமையாததெனவும் தெரிந்தோம். இதுகாலை மாணவர்கள் ஒழுக்கத்தைப் பொருட் படுத்தாமையால் உடல் வலியும்அறிவுவன்மையுங் குறைந்தவராகக் காணப்படுகின்றனர். இந்நிலையில் தாங்கள் விரும்பிய தகுதிச்சீட்டு கிடைக்கா விட்டால் உயிரையும் இழக்கத் துணிகின்றாராதலால், அவர்கள் உயிரினும் மேம்பட்டதாகக் கருதியது ஒழுக்கமன்று தகுதிச் சீட்டு என்றுதான் அறியக்கிடக்கின்றது. 'இளையான் அடக்கம் அடக்கம்" என்றபடி இளம்பருவத்தே பொறியடக்கங் கைவரப்பெற்றால் அவர்கள் எதிர்காலத்தில் அடையு நலங்கள் பலவாம். பாண்டியர்களைப்பற்றிச் சிலப்பதிகாரத்தில் கூறு மிடத்தில்,

" மடந்தையர், மடங்கெழு நோக்கின் மதமுகந் திறப்புண்,
டிடங்கழி நெஞ்சத்திளமையானை, கல்விப்பாகன் கைய
கப்படா அது, ஒல்காவுள்ளத் தோடுமாயினும், ஒழுக்கொ
டுபுணர்ந்தவிவ்விழுக்குடிப் பிறந்தோர்க், கிழுக்கந்தாராது"

அஃதாவது, மகளிருடைய பார்வையால் மதஞ்சுரக்கப்பெற்று, பாண்டியர் குடியிற் பிறந்தார்க்கு இளமையாகியயானை கல்வியாகிய பாகன் கைக்கடங்காமல் ஓடுமாயினும் தவறானநெறியிற் செல்லா தெனக் கூறப்பட்டுள்ளது. இதனானும் இளமைப் பருவம் ஒருவர்க்கு அடக்கியாளுதற் கரியதாயினும் அதனைத் தீநெறியிற் செலுத்துதல் கூடாதென்பது பெறப்படும்.

மாணவருட் சிலர், எங்கள் மனச்சான்றுக்கு விரோத மில்லாமல் எங்கள் மனம் போனவழியிற் செல்லுகின்றோம். அதனால் தவறில்லையென்று கூறுகின்றனர். துஷ்யந்தன் சகுந்தலையைக் கண்டபோது "என் உள்ளம் இவள்பாற்சென்றதாதலின் நான் உண்மையாகவே இவளைச் காதலிக்கின்றேன்" என்றான். அவனுள்ளம் கல்வி கேள்விகளாலும் நல்லோரிணக்கத்தாலும் பண்படுத்தப்பட்டு மாசறத் தெளிந்திருந்தமையாலும், முன்னெல்லாம் நன்னெறியிலேயே சென்றதென்பதை அநுபவத்தால் அறிந்துள்ளமையாலும் அங்ஙனம் கூறினான். அவ்வாறு தெளியப்படாத இவர்கள் உள்ளம்போன வழியே போதற்கும் கொலை முதலிய கொடுஞ்செயல் செய்வானொருவன் என் மனச்சான்றுக்கு மாறுபடாமலே செய்தேன் என்பதற்கும் வேற்றுமை காணப்படவில்லை. இதுகருதியே அறிவுக்கிலக்கணங் கூறப்புக்க ஆசிரியர் திருவள்ளுவர் "சென்றவிடத்தாற் செலவிடா தீதொரீஇ, நன்றின் பாலுய்ப்ப தறிவு" என்றார். அதற்கு உரை வகுத்த பரிமேலழகரும், "குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல வேறுக்கி மனத்தைப் புலம்அறிந்து செலுத்துவது அறிவு" என்று உரைவகுத்தார்.

மற்றுஞ் சிலர், "கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க அதற்குத் தக" என்னுங் குறளில் திருவள்ளுவர், 'கற்றபின் அதற்குத்தக நிற்க, என்றமையால், கலாசாலைப் படிப்புமுடிந்து வெளியேறிய பின்புதானே கற்றபடியொழுக வேண்டுமென்கின்றனர். இதற்கு மறுமொழியாவது, அவர்கள் நெடுங்கணக்காகிய அரிச்சுவடி படித்து முடித்தபோதே 'அறஞ்செயவிரும்பு' என்பது முதலிய நீதிவாக்கியங்களைக் கற்றிருக்கின்றனர். அதில் அறமென்றது, மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும் விலக்கியனவொழிதலுமாகிய அனைத்துக்கும் பொதுப் பெயராகலின், அவற்றைச் செய்ய இயலாதாயினும் விருப்பமேனுங் கொள்ளவேண்டும் என்பது அறிவிக்கப்பட்டுள்ளது. ஆதலால் அவர்கள் கற்கத் தொடங்கியது முதல் எவ்வாற்றானும் நல்லொழுக்கத்திற் றவறி வேண்டியவாறு திரியலாம் என்பதற்கு இடமில்லையென்று கூறலாம், ஆதலின் மாணவர்கள் பொறியடக்கமுடையவராய் நன்னெறியொழுகிக் கல்வி யறிவுகளாற் சிறப்புற்று எதிர்காலத்தில் நல்வாழ்வு வாழ்வார்களாக எனக் கூறித் தம் சொற்பொழிவை முடித்தனர்.

# தமிழர் புலமை

வித்துவான், பே. கோவிந்தன், கொடுமுடி

சொல்லினால் மகிழுஞ் சுவைகளை யாக்கும்;
சொல்லினாற் கனிமல ராக்கும்;
சொல்லினா லழகும் அணிகளு மாக்கும்;
சொல்லினாற் கலைகளு மாக்கும்;
சொல்லினா லெம்மைத் துய்த்திடச் செய்யும்;
சொல்லினால் வாழ்ந்திடச் செய்யும்;
சொல்லினுஞ் செல்லு மிடந்தொறுந் தொடரும்
செந்தமிழ் நாட்டினர் புலமை. 1

சுருங்கவுஞ் சொல்லி விளங்கவும் வைத்து
சொற்றொறுஞ் சொற்றொறும் நாவிற்
கரும்புசொற் சுவையுஞ் செவிகளுக் கிசையும்
அமைத்தரும் பொருள்திணித் தடைவே
பொருந்தக மலைவைக் களைந்தரும் பொருளைப்
புகழுமேற் கோளுடன் விளக்கல்
திருந்திய மனஞ்சொல் செயல்களை யுடைய
செந்தமிழ் நாட்டினர் புலமை. 2

தன்மையை யினிதின் நவிறலும், உவமை
சாற்றலும் வேற்றுமை சொலலும்,
இன்மையைச் சொலலும், நுண்மையைச் சொலலும்,
எதெடுத் தெழில்பெறச் சொலலும்,
முன்வருஞ் சொலையும் பொருளையும் பின்னும்
மொழிதலும், பிறவழிச் சொலலும்
தென்மொழி யறிந்து நன்னயந் தெரிந்த
செந்தமிழ் நாட்டினர் புலமை. 3

ஒன்றிரண் டெழுத்தால் சென்றிய வசையில்
ஒன்றிரண் டசையினா லாய
இன்றமிழ்ச் சொல்லால் ஒன்றிய அணிசேர்த்
தெதுகையும் மோனையும் இயைத்து,

நன்றியல் பாவால் தொன்றுதொட் டறிந்த
நற்பொருள் கொளக்கொளக் கொடுக்கும்
தென்றிசை வாழத் தொன்றுதொட் டுறையுஞ்
செந்தமிழ் நாட்டினர் புலமை. 4

மன்னவர் களிறு வழங்கிடிற் களிக்கும்;
மறுத்திடிற் களிறவர்க் களிக்கும்;
தன்னிலை யறிவார் நட்பினைக் கொள்ளும்.
தவிர்த்திடிற் கோவையுந் தள்ளும்;
உன்னரும் பொருளின் பொன்னபடி மேவும்;
உதவிக்கு நடக்கவும் ஏவும்.
சென்னியில் நெஞ்சில் நாவினில் வாழும்
செந்தமிழ் நாட்டின் புலமை. 5

செய்யுளிற் பற்பல் சீர்களைத் தொடுக்கும்;
சீறினர் சீர்களைக் கெடுக்கும்;
செய்யுளிற் பற்பல் தளைகளைத் தளையும்;
சேரர்கோன் காற்றளை களையும்;
செய்யுளிற் பற்பல் லடிகளை யாக்கும்;
தெளிவிலார்க் கடிகளை நீக்கும்.
செய்யுளிற் பொருளைச் சொல்வதில் தலைமைச்
செந்தமிழ் நாட்டினர் புலமை. 6

பல்வகை யறங்கள் ஆய்ந்தவர் தமக்கும்
பயில்தொறும் அறநெறி பயிற்றும்;
செல்வமும் நாடும் தேடினர் தமக்கும்
தேடுபல் நெறிகளைத் தெரிக்கும்;
மல்கிய அன்பால் மருவினர் தமக்கும்
மருவிவாழ் நெறிகளை யுணர்த்தும்.
சில்வகை யெழுத்தால் பல்பொருள் தெரிக்கும்
செந்தமிழ் நாட்டினர் புலமை. 7

காவியம் பாடும்; கணக்குக ளெழுதும்;
கைகளால் கால்களால் நடித்து,
நாவினி லிசைத்துக், கருத்துகள் விரித்து
நற்றமிழ் மூன்றையுந் தெரிக்கும்;

மூவிய லமைந்த இலக்கண முறைக்கும்;
முப்பொரு ளியல்பினை வகுக்கும்.
தேவிய லமைந்த நாவினிற் பொலிந்த
செந்தமிழ் நாட்டினர் புலமை. 8

தன்னையே புகழ்ந்த வடமொழி மாது
தாள்பணிந் தறிந்தசெம் பொருளை
முன்னரே யறிந்து மொழிந்தது போல
மொழியினும் வெகுளுத லின்றிப்
பின்னரும் அவட்கும் பிள்ளைகள் தமக்கும்
பெருமைதந்து ணர்வுதந் திரங்கும்.
தென்னவர் சோழர் சேரர்க ளென்னுஞ்
செந்தமிழ் நாட்டினர் புலமை. 9

பிறப்பிலுள் பொருளே கடவுளா மென்னும்;
பிறந்திறப் பனவுயி ரென்னும்;
அறத்திறம் எவர்க்கும் ஒருநிக ரென்னும்;
அனைவரும் ஒருகுல மென்னும்;
புறத்தினும் அகத்தும் நட்டல்நட் பென்னும்;
பொருளின்றி இன்பமின் றென்னும்.
திறத்திலும் புகுந்து நலத்துறை தெரிந்த
செந்தமிழ் நாட்டினர் புலமை. 10



# "பொருள் உறுமுறை"

திரு. K. கோவிந்தன், மாணவன், ஔவைத்தமிழகம், திருவத்திபுரம்

மதிக்கத்தக்க நாகரீகம் மிக்க நாட்டில், பொருள் நிலை எவ்வாறு கூறிடப்படுதல்வேண்டும்; ஒருவர் எவ்வளவு பொருள் பெறுதற்கு உரிமையுடையர்; அவர் அருகில் உள்ளார் எவ்வளவு பெறுதற்கு உரிமை யுடையர் என்பன போன்றவைகளை ஆராய்ந்து நேரிய முறையைக் கையாளுதல்வேண்டும்.

தற்கால உலகவாழ்வில், நம்மை யறியாமலே பொருள்கள் மணிக்குமணி, நிமிடத்திற்கு நிமிடம் கூறிடப்பட்டே வருகின்றன. உலகில் இறுதியாக இருவர் வாழும் வரையினும் பங்கிடப்பட்டே நிற்கும். பொருள்கள் கூறிடப்படுகின்றனவா, இல்லையா என்பதில் கருத்து மாறுபாடில்லை; ஆனால் பொருள் எந்த முறையில், எந்த திட்டத்தின்கீழ் கூறிடப்படுதல் வேண்டும் என்பதில்தான் கருத்து மாறுபாடு நிற்கின்றது.

பொருளைக் கூறிடும் முறையில் பலர் பல மாறுபட்டகொள்கையினை யுடையராகக் காணப்படுகின்றனர். அவருள் ஒரு சாரார், ஒருவர் தன் தனிப்பட்ட உழைப்பின் பயனாக உலகிடை எவ்வளவு பொருள்களை யுண்டாக்குகின்றாரோ, அவ்வளவு பொருள்களையும் அவர் தாமே அடைதல் முறையாகும் என்கின்றனர்.

2. அவரவர்கள் பெறுதற்குரிய முறையில், அதாவது, சோம்பேறிகளும், உடல்நலம் குறைந்தவர்களும், தீயொழுக்கமுள்ளவர்களும் ஒன்றும் பெறாமல் அழியவும், நல்லவர்களும், உழைப்பாளிகளும், செய்யும் தொழிற்கண் விரைவுடைமையுடையவர்களும் முற்றுப்பெற்று நல்நிலையில் வாழவும் கூடியமுறையில் கூறிடுதல் நலமுடையதாகும் என்பர் வேறு ஒரு சிலர்.

3. வல்லமையுள்ளவர்களே பொருளைப்பெறவும் பேணவும் உரிமையுடையர் ஆவர் என்றமுறை உலகத்தாரால், வெறுக்கப்படக்கூடியதும், நகைக்கப்படக்கூடியதுமாயினும் அதுவே தக்க முறையாகும் என்பர் மற்றும் ஒரு சிலர்.

4. சாதாரண மக்கள் இருக்கின்ற தங்கள் ஆடம்பரமற்ற நிலையிலேயே, பசியறவாழ வேண்டிய பொருள்களைப்பெற,

மேன்மக்கள் என்பார் மட்டில், மற்ற எல்லாப் பொருள்களையும் பெற்றுவாழும் நிலையில் பொருளைக் கூறிடுதல்வேண்டும் என்பர் இன்னும் ஒருசிலர்.

5. நாட்டுமக்களை, அவர்கள் செய்யும் தொழிற்கேற்ப, வகுப்பு வாரியாகப் பிரித்து, வகுப்பிற்குள்ளே, ஒருவருக் கொருவர் சமகூறுடையராகவும், வகுப்பிற்கு ஏற்ப உயர்ந்த கூறும், தாழ்ந்த கூறும் உடையராகவும் பொருளைக் கூறிட்டுக் கொடுத்து, கூலியாட்களைவிட அறிவுள்ள வேலையாட்கள் அதிக மாகவும், அறிவுள்ள வேலையாட்களைவிட, மதகுருக்கள் அதிக மாகவும், அவர்களைவிட, நியாயத்தலைவர்கள் அதிகமாகவும் பெறச்செய்வதே சிறந்த முறையாகும் என்பர் வேறுசிலர்.

6. உலகம் தன்னிலையிலேயே இயங்கவிட்டு விடுதலே நல முடையதாகும் என்பர் வேறு ஒருசாரார்.

7. மேற்கூறிய முறைகளுள் ஒன்றுகூட நன்கு நடை பெறக் கூடியதன்று; ஒருவர் எத்தகையராக இருப்பினும்சரி, அவர் எவ்வளவு பெரியவராக இருப்பினும்சரி, அவர் எத்தகைய வேலையைச் செய்பவராய் இருப்பினும்சரி, அவர்கள் சமகூறு பெறுதலே நடைபெறக்கூடியதும், நலமுடையதுமாய திட்ட மாகும் என்பர் பொதுவுடைமைக் கொள்கையாளர்.

இனி, இவர்கள்கூறும் முறைகள் ஒவ்வொன்றினையும் தனித் தனியே ஆராய்ந்து மேற்கொள்ளக்கூடிய முறையைக் கைக்கொள்ளுதலே நாம் செயற்பாலதாகலின், அவரவர்தம் கூற்றுக்களைத் தனித்தனி உற்றுநோக்குவாம்.

ஒருவர் தன் தனிப்பட்ட உழைப்பின் பயனாக, உலகிடை எவ்வளவு பொருள்களை உண்டாக்குகின்றாரோ, அவ்வளவு பொருள்களையும் அவர் தாமேயடையலாம் என்ற முறை, நோக்குவார்க்கு நலமுடையதாகத் தோன்றினும், அதை நடை முறையில் கொணர்வுழி, முதலாவதாக உலகிடை, ஒவ்வொரு வனும் எவ்வளவு பொருளை உண்டாக்கினான் என்பதை யறிவது முடியாதகாரியமாகவும், உலகில் செய்யப்படுகின்ற வேலைகள் முற்றும், உருவப்பொருள்களை உண்டாக்குவனவோ, இயற்கைப் பொருளை மாற்றி யமைப்பனவாகவோ நில்லாது, பல வேறு பட்ட உழைப்பாகவும் விளங்குவதைக் கண்டு வருந்தவேண்டிய வராகவே இருக்கின்றோம்.

ஒரு பயிர்த்தொழிலாளியும், அவனுடையவேலையாட்களும், உழுது, விதைத்து, அறுவடையாக்குகின்றனர் என்றாலும், அவர்களில் தனித் தனியாக எவ்வளவு பொருளை உண்டாக்கினார்கள் என்பதை அறியமுடியாமலே நிற்கின்றோம்.

ஓர் இயந்திரம் கணக்கற்ற ஊசிகளை நாள்தோறும் உண்டாக்குகின்றது என்றாலும், அவ்வூசிகளில் எவ்வளவு ஊசிகளை, இத்தகைய இயந்திரம் ஒன்றைச் செய்யக்கூடும் என எண்ணிய பெரியார் செய்தாராவர்? எத்தனை ஊசிகளை அவ்வியந்திரம் இவ்வாறு தான் செய்யப்படுதல்வேண்டும் எனக் கூறினார் செய்தாராவர்? எவ்வளவு ஊசிகளை அவ்வியந்திரத்தைச் செய்தார், செய்தாராவர்? எவ்வளவு ஊசிகளை அத்தொழிற்சாலையில்உள்ள தொழிலாளிகள் செய்தாராவர்?. என்பன போன்ற வினாக்களுக்கு விடையிறுக்கமாட்டாத நிலையிலேயே இருக்கின்றோம்.

ஒருவன், நாற்காலியையோ அல்லது வேறு ஒரு மரச் சாமானையோ செய்கின்றான் என்றாலும், அவைகளும் கூட அவன் ஒருவன் தன் உழைப்பினால்மட்டும் உண்டாயின என்று கூறுவதற்கில்லை. மரம் வைத்தவன், அதை வெட்டினவன், அதைத் துண்டித்தவன், அதை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுசேர்க்கும் வண்டிக்காரன், படகுஓட்டி, கப்பல் ஓட்டி, துறைமுக வேலையாளர், அதைப் பலகையாக அறுப்பவன், அதை உருவாக்கிய இணைப்பாளன், வியாபாரி என இத்தனை பேர்களுடைய உழைப்பின் பயனாகவே, நாற்காலியோ அல்லது வேறு மரச்சாமானோ உண்டாக்கப் படுமேயாயின், அதற்காகக் கொடுக்கப்படும் பொருளை யார் யார் எவ்வளவு எவ்வளவு அடைதல்வேண்டும் என்பதை அறியமுடியுமா என்பதைக் காணமுயலின் அது முடியாததொன்றாக இருத்தல்கண்கூடு.

இனி, ஒருவர், ஒரு பொருளைச் செய்வதற்காக அவரால் எவ்வளவு காலம் செலவழிக்கப் படுகின்றதோ அதற்கேற்பப் பொருளைக் கூறுசெய்தல் முடியுமா என்பதைச் சற்று உற்று நோக்குவாம். ஒருமணிநேரம் வேலைசெய்தவனுக்குக் கொடுக்கும் பொருளைப்போல இருமடங்கு பொருளை இரண்டுமணி நேரம் வேலைசெய்தவனுக்குக் கொடுத்தல் எளியமுறையாகும். ஆனால் மணிக்கு ஒரு பைக்கு வேலைசெய்கின்றவர்களும், 16 பைக்கு வேலை செய்கின்றவர்களும், ஒரு வெள்ளிக்கு வேலைசெய்கின்றவர்களும், 20-வெள்ளிக்கு வேலைசெய்கின்றவர்களும், ஆகப் பல

திறப் பட்டவர் உளர். இத்தகைய மாறுபட்ட நிலையெல்லாம் அத்தகையவர்களால் செய்யப்படும் பொருள்களை எதிர் நோக்கி நிற்கும் மக்களின் எண்ணிக்கையையும் தகுதியையும் பொறுத்த தாயுள்ளது.

ஒரு நடிகனுக்கு ஒருவாரத்திற்குக் கொடுக்கும் பொருளை. ஒரு இசைப் புலவனுடைய ஒரு மணிநேர வேலைக்குக் கொடுக்கின்றோம். காரணம் மக்கள் நாடகத்தினும், இசையில் விருப்பமுடையராய் இருத்தலேயாகும். நல்லுருவும், நல்வழியும், நாடகவுணர்வும்பெற்ற சிறுகுழந்தைகள் சில மணிநேரத்தில் பெறும் பெரும் பொருளின் சிறு பகுதியைக்கூட அவற்றின் தாயினால், அதேகாலஅளவிலாயினும்சரி, அதனின் மிக்க கால அளவிலாயினும் சரி பெறமுடியாமல் போகின்றது. நல் வாழ்க்கைப் பயனால் ஒருத்தி பெறும் பொருளினும் பலமடங்கு அதிகமான பொருளை அவளுடன் பிறந்தாள் அதே காலஅளவில் தீயொழுக்கத்தால் அடைகின்றாள். புகழ்பெற்ற இரணவைத்தியருக்கோ, அல்லது பாடகருக்கோ கொடுக்கப்படும் பொருளை அவர்கள் தங்களுடன் வந்த கையாட்களும் தாங்களுமாக கூறிட்டுக் கொள்ளுழி, தாங்கள் அதிகப்படியான பொருளையும், தங்களின் கையாட்கள் குறைந்தபொருளையும் பெறும் முறையில் கூறிடுகின்றனர். அவர்கள் அனைவரும் பாடுபட்ட நேரம் ஒன்றாகவும், பொருள் கூறிடும் முறையில் வேற்றுமை காண்கின்றோம். காரணம், வைத்தியரும் பாடகரும் தாங்கள் அத்தகைய நிலைக்கு வருவதற்குப் பல்லாண்டுகள்வரை அத்துறையில் பயிற்சி பெறவேண்டியவர்களாகவும், கையாட்கள் அஃதிலராகவும் இருப்பதேயாகும். முன்னைய இருவரும்தாங்கள் பயிற்சி பெறுதற்காகச் செலவழிக்கப்பட்ட கால அளவையும் தாங்கள் வேலைசெய்யும் கால அளவுடன் சேர்த்துக்கணக்கிடுவாராயினர். ஆகவே, காலத்தைக் கொண்டும் பொருள்களைக் கூறிடுதல் கூடாத காரியமாதல் பெற்றாம். ஆகவே, இம்முறை முதலாவது கூற்றுப் பொருந்துமாறில்லை யறிக.

2. அவரவர்களின் தகுதிக்கேற்பப் பொருளைக் கூறிடுதல் வேண்டும் என்பார், தங் கூற்றிற்கு ஆதாரமாக, நல்லொழுக்கம் வாய்ந்த ஒரு தொழிலாளியைக் காட்டினும், தீ யொழுக்கம் வாய்ந்த ஒரு தொழிலாளி, தொழில்பெறு முறையில் மிக்க இன்னல் அடையவேண்டியிருத்தலையும், சூதாட்டம்ஆடுபவனும், மிக்க பந்தயம் கட்டுபவனும், டாம்பீக வாழ்க்கைக்காக வேண்டி தன் நிலத்தைப் பிறன்பால் ஒற்றிவைப்பவனும், நாளடைவில்

வறியனுவதையும்,சோம்பேறித்தன்மைமிக்கவாணிபத்தொழிலை நன்கு எண்ணிச்செய்யாத ஒருவியாபாரி, நாளடைவில் கடனாளி ஆதலையும் குறிப்பிடுவோராயினர். ஆனல், கடிகன் மனமும், பிறன் பொருள் விழைவும், தன்னலமும் கொடுஞ்செயலுடைமையும் ஆய குணம்வாய்ந்தார் செல்வராகவும், செந்தண்மையும், பொது நல உணர்வும், கேளாந்தன்மையும் வாய்க்கப்பெற்றார் வறியராகவும், இருத்தலை அவர் அறியார்போலும். இன்னும் சிலர், பிறப்பானே செல்வராகவும், வறியராகவும் இருத்தலும் கண் கூடாம். அவர்கள் கூற்றுப்படி, அவரவர்தம் தகுதியறிந்தே பொருளைக் கூறிடுதற்கு முன்னரே,—ஒரு குணமும் வாய்க்கப் பெருத இளமைக் காலத்திலேயே அவர்கள் வறியராகவும், செல்வாராகவும் இருத்தற்கு இவர்கள் யாது கூறுவரோ அறியேம்.

இனி, ஒவ்வொருவருடைய தகுதியை அளந்தறிவதாவது கூடுமான செய்கையா என்பதை நோக்குவாம். கொல்லனுக்கும், மதகுருவுக்கும் உள்ள தகுதி வேறுபாட்டை, எங்ஙனம் அளந்தறிதல்கூடும். மதகுரு பலநூல்களைப் படித்திருக்கலாம். அதன் பயனுக, கொல்லனுல் செய்யப்படமாட்டாத சொற்பொழிவு நிகழ்த்தலாம். ஆனல் கொல்லன் செய்யக்கூடிய, குதிரை லாடத்தையோ, அல்லது பிறவேறு சாமானையோ செய்ய இயலாது. அதேபோன்று, கொல்லனும் மதகுரு செய்யக் கூடியனவற்றைச் செய்ய இயலாதவனுகவே இருக்கின்றான். இந்நிலையில் நோக்கின், ஒருவர் தகுதியைக்கொண்டு பொருளைப் பங்கிடுதல் கூடாதகாரியமாம். ஒரோவழி, அவர்தம் தகுதியை அளவிடுதல் கூடுமானதாயினும், ஒருவனைவிட, மற்றொருவன் இவ்வளவு அதிகப்படியான தகுதி வாய்ந்தவன் என்றோ; இவ்வளவு குறைந்த தகுதி வாய்ந்தவனென்றோ, திட்டமாகக்கூற இயலாதாகலின் இம்முறையும் பொருந்தாமையறிக.

3. வல்லமை யுள்ளவர்கள் வன்கண்மையுடன் பொருள்களைப்பெற்று வாழலாம் என்றமுறை நாட்டில், அமைதியையும், கட்டுப்பாட்டையும் அழிக்கும். நாட்டில் உள்ளார் அனைவரும் ஒத்த வன்மையும், ஒத்த சூழ்ச்சியும் உடையராய் இருப்பின் எல்லாரும் ஒப்ப நலமடைவர். ஆனல் உலகில் குழந்தைகளும், முதியோரும் திறமை யற்றவர்களும் இருப்பதோடு, ஒத்த பலமும், ஒத்த ஆண்டும், ஒத்த உடல்நலமும் வாய்க்கப் பெற்ற ஒருசிலருள்ளும், பேராசையும், கொடுமைநிறையுள்ளமும் உடையவரும், அவையில்லாருமாக மாறுபட்டவர்களும் இருத்

தலின் அது கூடாதகாரியமாம். வியாபாரிகள், பொருளை எவ்வளவு உயர்ந்தவிலைக்கு விற்கத்தங்களால்இயலுமோ அவ்வளவும் முயற்சிப்பர். வீடுடையவர்கள், வீட்டில் குடிவாழும் மக்களின் நிலைமையையும் ஓராது வீட்டின் மதிப்பிற்கு மேலும் வாடகை வாங்க முற்படுவர். இறுதியாக நோக்கின், இத்திட்டம் உருப்படாததொன்றாகவே முடியும் என்பது முடிபாயிற்று.

4. ஒருசிலர் பொருட் பகுதியில் மிகப் பலவற்றைப் பெற்று நன்குவாழ, பலர், சிலபொருள் பெற்று வாழ்தலாகிய முறையே இன்றுநாட்டில் நிகழ்வதாகும். இதனால் பயனடைபவர்கள் நாட்டை ஆளவும், புதுப்புது சட்டங்களை இயற்றிப் பரிபாலிக்கவும், நாட்டு நன்மைக்காகப் படைகளைத் திரட்டி நடத்தவும், கல்வி, விஞ்ஞானம், கலை, இலக்கியம், சித்தாந்தம், சமையம், முதலாயினவைகளைப் பாதுகாக்கவும், சிறந்த மாடங்களை வகுக்கவும் புதுமுறையில் உடுத்தவும், சிறந்த முறையில் வாழ்க்கையை நடத்தவும் போதிய கல்வியைப் பெறுவாராயினர். அவ்வாறு செலவுக்கு மேலும் பொருள் கொடுப்பதால் முதல் எனக்கூறப்படும் அம்மிக்கபொருளால், பொருளை அதிகப்படியான அளவில் உண்டாக்குவதற்குரிய சாதனங்களான புகைவண்டித்தொடர், சுரங்கங்கள், வாணிபநிலையங்கள், முதலாயவைகளை உண்டாக்க முடிகிறது என்பர் ஒருசிலர்.

இலர்பலராகவும், உளர் சிலராகவும் அமைந்த இத்திட்டம் சில்தொகையினராட்சி (Oligarchy) எனப்பெயர் பெறும். இந்த முறை மாறினால் மேற்கூறிய துறைகள் யாவும் பாழடையும். ஆகவே, தாங்கள் இலராகவும் இதையே ஆதரிப்பாராயினர்.

இம்முறையைக் கையாளுவதற்கு முன், மிக்கபொருளைப் பெறுதற்குரியார் யார் என்பதைக் காணுவதில் ஐயம் நிகழ்கின்றது. அவ்வாறே நாம் ஒருவரை மேற்கொண்டு அவர்பால் நாட்டை ஒப்புவித்தால், நாம் எதிர்நோக்குவனவற்றை, அவர் செய்து முடிப்பாரா என்பதில் இரண்டாவது ஐயம்நிகழ்கின்றது. அவர்கள் சாதாரண மக்களுடன் கூட்டுறவு பெறுமையால், மக்களின் மனக்குறைகளை அறிய மாட்டாராகலின், அவர்களால் நாட்டிற்குச் சிறுநலனும் வாய்க்காதென்பது துறுதி. அதற்கு மாறாக, அவர்கள் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்வான் வேண்டி, இன்னும் அதிக நேரம் வேலைசெய்து குறைந்த கூலி பெறவே ஏழைமக்களைக் கட்டாயப்படுத்துவர். விளையாட்டு வேடிக்கைகளுக்கும், விருந்திற்கும், ஆடம்பர வாழ்க்கைக்கும்

பொருளின் மிக்கபகுதியைச் செலவிட்டு கல்விக்கும், கலைக்கும் சிறுபகுதியைச் செலவழிப்பர். இராணுவத்தைப்பற்றிய கவலையற்றவராகவேனும், அல்லது அதைத்தன்னுடைய பரிவாரமாக மாற்றிக் கொண்டு, உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் உள்ள தமக்குப்பகையாயினரை அடக்கவேனும் முயல்வர். தங்களை மேன்மைப் படுத்திக்கொள்ளவும், தங்கள் குற்றங்களை மறைப்பதற்காகவும்வேண்டி, கல்லூரி, கலாசாலைகளில் கல்வியைக் குறைப்பர். தங்களை இன்றியமையாதவர்களாக ஆக்கிக்கொள்ளுவதற்காகவேண்டி, சாதாரண மக்களை, ஒன்றும்அறியா ஏழைகளாகவும், அடிமைகளாகவும் ஆக்கவே முயல்வர். இறுதியில் அவர்கள் கடமைகள் எல்லாம், பாராளுமன்றம், நகராண்மைக் கழகம், சட்ட நிரூபணமன்றம் முதலாயவைகளால் கைக்கொள்ளப்பெற்று, நாட்டுமக்களால் தரப்பெறும் வரிப்பணத்தைப்பெற்று வேலைசெய்யும் ஒருசிலர்பால் விடப்பெறும்.

பொருள்நிலை சமமாகக்கூறிடப்படின், பொருள்எல்லாம் செலவழிக்கப்பட்டு, புகைவண்டித்தொடர்உண்டாக்குவதற்கும், சுரங்கங்கள் வெட்டுவதற்கும், தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதற்கும் பொருள் இன்றிப்போய்விடும் என்கின்றனர். இக்கூற்று உண்மை என்றாலும், நாட்டுக்குழந்தைகள் நன்குவளர்ந்து வாழ்தற்கு வேண்டிய பால் கிடைப்பதற்குமுன் நீராவிப்பொறி செய்தல் அறிவற்றவன் செயலேயாகும். ஆகவே இம்முறையும் பயனற்றதென்பது தெளியப்பட்டது.

5. உலகில் எத்தனை வகையான தொழில் முறைகள் உளவோ அத்தனை வகுப்பாக மக்களைப் பிரித்து, தொழிலிற்கேற்ப அவ்வவ்வகுப்புகளுக்கு வேறுபட்ட பங்குமுறைகளைத் தருதல்வேண்டும் என்பார் கூற்றுப்படி, குப்பை கூட்டுவோன், வீட்டுவேலைக்காரன், சமையல்காரன் முதலாயினர், மதகுரு, ஆசிரியன், இசையாளன், முதலாயினரைவிட குறைவான பொருளைப் பெறுதல்வேண்டும் என்பது அவர் கருத்தாதல் பெற்றும். கல்விகற்று, அறிவுடையராய் அதனுல் பெரியாராகி, பள்ளி ஆசிரியர், மதகுரு முதலாயினர் கல்விகல்லா கீழ் மக்களாகிய ஏழைத்தொழிலாளிகளைக் காட்டினும் அதிகம்பெறுதல் முறையாகும் என்று அவர்கள் கருதுகின்றார்போலும். பெருந்தன்மையின் அறிகுறியேபெருத, கல்வி ஒருசிறிதும் கல்லாத இயந்திர ஓட்டிகள் கல்வி கற்றவர்களைவிட மிக்க பொருளைப் பெறுவதை இன்று நாம் காண்கின்றோம். பெருங்குடிப்பிறப்பும், பெருங்கல்வியும் வாய்க்கப்பெருதார் பொருளுடையராகவும்,

ஞானாசிரியர்களும், புலவர்களும் பொருளற்ற வறியராகவும், இருப்பது கண்கூடாம்.

ஒரு தொழிலாளி நன்குவாழ எவ்வளவு பொருள் செலவாகுமோ அதைவிட அதிகமான பொருள் வேறு ஒரு தொழிலாளிக்குச் செலவாகும் எனச் சிலர் நினைக்கலாம். அவ்வாறு நினைப்பார் உளராயின் அவர்களை அத்தகைய நினைப்பைக் கைவிடுமாறு நான் கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு ஏழைத் தொழிலாளிநன்கு வாழ்வதற்கு எவ்வளவு உணவு உட்கொள்கின்றானோ அதேஉணவு அரசனையும் நன்குவாழச்செய்யும்; இன்னும் கூறுவோமேயானால், அரசன் உட்கொள்ளும் உணவினும் அதிகப்படியான உணவை யுட்கொள்ளும் தொழிலாளிகளும் உளர் எனலாம். அரசனுடைய பக்கை இரண்டு மடங்காக்குவதனாலேயே, அவனால், இருமடங்கு உணவையுட்கொள்ளமுடியாது; இருமடங்கு நீரை யுட்கொள்ளமுடியாது; இருமடங்கு உறக்கம் மேற்கொள்ளமுடியாது; இருமடங்கு பெரிய மாடியில் வாழமுடியாது; இருமனைவிகளை மேற்கொள்ளமுடியாது; இரு இல்லற வாழ்க்கையை நடத்தவும்முடியாது. ஆகவே இம்முறை எவ்வாறு நோக்கினும் அறிவொடுபடாத் திட்டமாகவே யுள்ளது.

6. தற்சமயம், உலகம் தன்னிலையிலேயே இயங்குமாறு விட்டு விடுதலாகிய முறை, எளிமையும், பாதுகாப்பும் உடையதாகத் தோன்றினும், அது மிகவும் அரியதும், முடியாததுமாகும். ஒருபொருளை எவ்வளவு பாதுகாப்புடன் வைத்திருப்பினும், அது தன்னிலையில் நில்லாது மாறுபட்டே நிற்கும். உண்மையைக் கூறுவோமாயின், பாதுகாப்பில் இருக்கும் பொழுதினும், அதை, அது தன்னிலையிலேயே விட்டுவிடும்பொழுது உண்டாகும் மாறுபாடு மிக விரைந்ததும், திடுக்கிடக்கூடியதுமாகும்.

ஒவ்வொருவன் செய்யும் தொழிலும் அவனுக்கே உரிமையுடையதாக நில்லாமையால் கடந்த நூற்றைம்பது ஆண்டுகளாக உலகிடை ஏற்பட்ட மாறுபாடுகள் மிகப் பலவாம். நீராவியினால் ஓட்டப்பெறும் இயந்திரவரவாலும், மின்சாரத்தினால் ஓட்டப்பெறும் இயந்திரவரவாலும், கடல் மேலும், கீழும் ஓடும் இயந்திரவரவாலும், வானிடையுலவும் இயந்திர வரவாலும், நம்மிடையே இலரே இலராகு முறையில் மிக்க பொருளை உண்டாக்கவும், தொழில் முறைகளை எளிமையுடையதாக்கவும் கூடிய ஆற்றல் நமக்கு வாய்த்திருக்கின்றது. முற்காலத்தில் நாம் பாடு

பட்ட அளவு இன்று படுவோமாயின் வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாய தொழில்களைப் பாதிகால அளவில் முடித்துக் கொண்டு, மற்ற பாதிகால அளவை, விளையாட்டு வேடிக்கைகளுக்கும், ஆடல் பாடல்களுக்கும் செலவிடவும் கூடும்.

இம்முறை, இயந்திர வரவிற்குமுன் ஏழை மக்கள் எந்நிலையில் இருந்தார்களோ, அதைவிடப் பன்மடங்கு கீழான நிலையில் அவர்களைக்கொண்டு வந்து விட்டுவிட்டது. இம்முறை இவ்வாறே நீளவிடப்படின், இன்று ஏழைமக்கள் ஒருவெள்ளிக்கு எவ்வளவு பாதுகாப்பு அளிக்கின்றார்களோ, அதைவிட, பன்மடங்கு பாதுகாப்பை ஒரு தம்பிடிக்கு அளிக்க நேரிடும். ஆனால் பொருளாளர்மட்டில், பொருளாளராகவே விளங்குவர்; என்றாலும், அவர்கள், அந்தக் காலத்தில், இருந்ததுபோல, அருள் நிறையுள்ளமும், பெருந்தன்மையும் உடையராக இலராய், ஆடம்பர வாழ்க்கையும், வன்னெஞ்சமும் உடையராகவே விளங்குகின்றனர்.

ஒருவர்கூறினர் (King Alfred) உலகநிகழ்ச்சி முறைகள் இவ்வாறே விடப்படின் வேலைசெய்யாச் சோம்பேறி ஒருவன், பெரிய வீடுகள் ஐந்து பெற்றுவாழ, அரும்பாடுபடும் மக்கள் அறுவர் ஆடையும் இலராய் ஒரே அறையில் அடைபட்டு வாழும் காலம் கூடியவிரைவில் ஏற்படும் என்று. அதேநிலைதான் இன்று நேர்ந்துள்ளது.

பொருள்நிலையும் மக்கள் நிலையும் மாற்றம் பெறாவிடின், உலகம் தன்னிலையில் இயங்கவிடுவது நன்றுடையதாகும். ஆனால் அது நடைபெறாததொன்றே யாகும். நாம் செயலொழிந்து நிற்பது நீர் தன்னிலையில் ஓடிக்கொண்டேயிருக்க நாம் மட்டில் செயலொழிந்து அதன்கரையில் உட்கார்ந்திருப்பது போன்றதாயின் நலம். ஆனால் அது அவ்வாறின்றி, குதிரை பூட்டபெற்ற வண்டியில் உட்கார்ந்திருப்பது போன்றதாயின் அதுகூடாத காரியமேயாகும். வண்டியில் செயலொழிந்திருப்போமாயின், குதிரை தான் முனைத்தஇடமேசென்று இறுதியில் ஒருபெரும் பள்ளத்தில் தள்ளிவிடுதல் ஒருதலையாதல்போல, உலகத்தைத் தன்னிலையில் விட்டு விடுவோமாயின் அதுவும்முறையின்றிக் கெடுதல் ஒருதலையாம்என்க. எனவே இம்முறையும் பயனற்றது என்பது பெறப்பட்டது.

இதுகாறும், பொதுவுடைமையாளர் கூற்று ஒன்று தவிர மற்றெல்லாம் ஆராயப்பட்டன. அதன்பயனாக, ஒருவரின் தகுதி,

பொருளீட்டும்ஆற்றல், பெருந்தன்மை முதலாயவற்றின் தகுதிக் கேற்ப, பொருளைக் கூறிடும் முறையும் பயனற்ற தென்பது வெளியாயிற்று; பொருளிற்கும், வேலைக்கும் சம்பந்தம் கற்பித்து அதன் மூலம் கூறிடும் முறையும் தோல்வியுற்றது; வேலைக்கும், குணத்திற்கும் சம்பந்தம் நோக்கிக் கூறிடும் முறையும் பயனற்ற தாகிவிட்டது; பொருளிற்கும், பெருந்தன்மைக்கும் சம்பந்தம் நோக்கிக் கூறிடும் முறையும் தோல்வியுற்றது; எல்லா வற்றையும் கைவிட்டு உலக நிகழ்ச்சிகளை அதன் நிலையிலேயே விட்டுவிடும் முறையும் நடவாத தொன்றாகிவிட்டது.

இறுதியாக நோக்குழி, இறுதிவரை நின்று நிலைக்கும் முறை, ஏழைகள் துயர்நீத்து வாழும்முறை எம்முறையோ, அம்முறையேயாகும் என்பது தெரியப்பட்டமையின், பொது வுடைமையாளர் கூற்றினை நோக்குதற்குமுன் ஏழையென்பது பற்றிச் சிறிது கூறுவாம்.

---

## தமிழ்ச் செய்திகள்

# தில்லைத் தமிழ்க் கழகம், சிதம்பரம்

கரந்தைத் தமிழ்ச் சங்கத்துடன் இணைப்புப்பெற்றது.

## இளங்கோவடிகள் விழா

இவ்விழா 9—4—39-ல், சிதம்பரம் தில்லைத் தமிழ்க்கழகத் தாரால் பச்சையப்பன் கல்லூரியிற் கொண்டாடப்பட்டது. விழாவிற்குக் கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் தமிழவேள், த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் B. A. B. L., தலைமை தாங்கினார்கள். இத்தமிழ்க் கழகத்தின் சார்பில் மூன்றாண்டு களாக, ஞாயிறுதோறும் பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியா ரவர்களிடத்து, சிலப்பதிகாரம் பாடம் கேட்டுவந்த ஆங்கில மொழியிற் பட்டம்பெற்ற அறிஞர் நால்வர் விழாவின் தொடக் கத்தில் பண்டிதமணி அவர்கள் அவைத் தலைமையிற் சிலப்பதி காரச் சொற்பொழிவாற்றினர். முதற்கண் தலைவர் குறிப்பிட்ட தாவது:—சிலப்பதிகாரமாகிய பெரும் பொருட்டொடர் நிலைச்

செய்யுளைச் சீர்பெறப் பாடி முடித்த பெரியார், இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனின் இளைய மகனாராய இளங்கோ ஆவார். தந்தை முன்னர்த் தம்பியாகிய தம்மை அரசியற் குரிமைப் படுத்தியும் தம் தமையன் செங்குட்டுவனுக்குரிய அரசியலுரிமையை நீக்கியும் சிலமொழிகளைக் கூறிய கணிவனை வெறுத்துத் துறவறமேற்கொண்டு சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத்தந்தமிலின்பத் தரசாள் வேந்தராயினர். சிலப்பதிகாரத்து இந்நிகழ்ச்சி தேவந்தி மேற்றோன்றிய கண்ணகியார் கூற்றில் வைத்துரைக்கப் படுகிறது. இங்ஙனங் கண்ணகியாராற் புகழப்பெற்ற இளங்கோவடிகளார், அவ்வம்மையார் தம் வரலாற்றுத் திறமுரைத்தலைத் தகுதியாகக் கொண்டார். இவர் தாம் நேரிற் கண்டுணர்ந்து, தமிழ் மூவேந்தர் நாட்டில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும்கொண்டு மூன்று உயரிய குறிக்கோள்களைச் சிலம்புகாரணமாகப்புலப்படுத்துகின்றனர். இதுமுதனூல். சுவையுணர்வார் உவகை, அவலம், பெருமிதம் என்ற மூன்றினையும் முதன்மையாகக் கொள்வர். காண்டம் மூன்றால் முத்தமிழையும் குறிப்பிடக்கருதிய பெரியார், இம்மூவகைச் சுவைகளையும் இதனகத்துட் புலப்படவைத்தார். உவகையைப் புகார் காண்டத்தும், அவலத்தை மதுரைக் காண்டத்தும், பெருமிதத்தை வஞ்சிக் காண்டத்தும் புலப்பட வைத்தமை போற்றி யுணர்தற் பாலது.

சிலப்பதிகாரம் என்ற பெயரை அடிகள் இந்நூலுக்குரிமையாக்கினமை யுணர்தற்குரித்து. வடமொழியில் மண்ணியல் சிறுதேர் (மிருச்சகடிகம்) என்ற நாடகப்பெயர் போலச் சூழ்வினைச் சிலம்பு காரணமாக இப்பெயர் இந்நூலுக்கிடப்பட்டது. இந்நூலின் பெருமை யுணர்ந்த காலஞ்சென்ற சுப்பிரமணிய பாரதியார் 'நெஞ்சை யள்ளுஞ் சிலப்பதிகார மென்றோர் மணியாரம், என இதைப் புகழ்ந்துரைத்தார். இத்தகைய மணியாரத்தைத் தமிழ்த்தாய்க் கணிந்த இளங்கோவடிகளாரைப் போற்றுமுகத்தான் நல்விழாக் கொண்டாடுதல் நம்மவர் கடமையாம், எனத் தம் முன்னுரையிற் குறிப்பிட்டார்கள்.

பின்னர், தலைவரவர்களிடம் சிலப்பதிகாரம் பாடங்கேட்ட அறிஞர்கள் திரு. சீ. திருவேங்கட நயினாரவர்கள், சு. பூவராகம் அவர்கள், த. பு. நவநீதகிருட்டினன் அவர்கள், ச. க. கோவிந்தசாமி அவர்கள் ஆகிய நால்வரும் தாம் பயின்ற சிலப்பதிகாரக் காப்பியப் பொருளை உரைசால் பத்தினி, ஊழ்வினை, தமிழர் வாழ்க்கை, அரசு பிழைத்தோர் என நால்வகையாகப் பகுத்துக்

கொண்டு முறையே ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருள்பற்றித் தெள்ளிய தீந்தமிழ் நடையில் காப்பியச் சுவை பல கவினச் சொற்பொழிவாற்றி மகிழ்வித்தார்கள். அவர்கள் அவ்வப் பொருள்பற்றிப் பேசியதன் சுருக்கம் பின் வருமாறு :—

## உரைசால் பத்தினி

பத்தினியையேத்துதல் இளங்கோவடிகளின் உட்கோளாதலால் இப்பொருள்பற்றி முன்னர்ப் பேசுதல் பொருத்தமுடையதுதான். உரைசால் பத்தினிக் குயர்ந்தோரேத்தலும் என்பதற்குப் புகழமைந்த கற்புடை மனைவியரை உயர்ந்தோரேத்துவர் என்பது பொருளாம். கற்பு, தலை, இடை, கடை என மூவகையாகவும், அறக்கற்பு, மறக்கற்பு என இருவகையாகவும் கூறப்படும். அறக்கற்பிற்குரியார் பாண்டியன்றேவியார், மறக்கற்பிற்குரியார் கண்ணகியார். ஈதை வான்கொடியன்னாள் என இளங்கோவடிகளும், தீதிலா வடமீனின் திறமிவள் திறமென உலகத்தாரும் கண்ணகியைப் போற்றினர். அன்றியும் கண்ணகியாரின் சிறப்புக் கருதியே மன்னரும் வானவரும் போற்றினரென்ப. தம் இல்லறம் நடாத்துங்காலையில் அறவோர் அருந்தவர் விருந்தினர் ஆகியவர்களைப் போற்றினர். மாசறு பொன்னே வலம்புரி முத்தே காசறுவிரையே கரும்பே தேனே என்றாங்குக் கணவனாகிய கோவலனாற் போற்றப் பெற்றனர். தன்னை நீங்கிக் கோவலன் மாதவியை யடைந்தின்புறுகாலை இவ்வம்மையார் ஒன்றுந்துய்க்கா வுணர்வுபெற்றனராயினும் தம் நாயகனை வெறுத்தாரல்லர். அன்றியும் தன்றுயரைச் சுற்றமறியாவகை மறைத்தார். தன்பாற் கனா நிகழ்ச்சி கேட்ட தோழி தேவந்தி கூறிய தெய்வ வழிபாட்டைக் கேட்டு அதனைத் தான் மேற்கொள்ளல் தன் கற்பறத்திற்கு முரண்பட்டதென்பதனை வற்புறுத்தினார். தான் செய்த பிழை நினைந்து தலைநாணி நின்றதன் கணவனைக்கண்டு பொருள் விருப்புடையனெனக்கருதி இன்முறுவற் குறிப்புணர்த்தித் தன்னிடத்துள்ள சிலம்பினைத் தருவதாகக் குறிப்பிட்டார். மதுரை செல்லக் கருதிய தன் கணவனொடு புறப்பட்டார். 'வண்ணச் சீறடி மண் மகளறியா' மங்கையாய இவ்வம்மையார் தன் துயர் காணாத் தகுதி மேற்கொண்டு கணவன் றுயர் கருதிக் கவன்றார்.

கௌந்தியடிகளுடன் மதுரைசெல்லும் வழியிற் கோவலன் நீர் கருதித் தனிச்சென்றபொழுது வயந்தமாலை யுருக்கொடுவந்த தெய்வத்தைத் தான்வல்லமந்திரங்கூறித் தடுத்தனன். அங்ஙனம் தடுக்கப்பட்டதெய்வம் புனமயிற்சாயலாகிய கண்ணகியார்க்கும்,

புண்ணிய முதல்வியாகிய கவுந்தியடிகளுக்கும் யான்வஞ்சனையா லெதிர்ப்பட்டதனைக் கூறுதேகுதல் வேண்டுமெனக் கோவல னிடம் கேட்டுக்கொண்டதனை யுன்னுமிடத்து, தவத்தோர் சாபத்தினும் கற்புடை நங்கையர் சாபம் தெய்வத்தானும் பொறுத்தற்கரிய கடுமை யுடையதென்பது நன்கு புலனும். இவர்கள் வேட்டுவச் சிற்றூரிற்றங்கியபொழுது கொற்றவை யேறிய சாலினியென்பாள் கோவலன் புறத்தொதுங்கி நின்ற கண்ணகியாரை 'இவளோ கொங்கச்செல்வி குடமலையாட்டி தென்றமிழ்ப்பாவை செய் தவக்கொழுந்து' என்றுங்குப்போற் றிய நிலையில் 'தன்புகழ் கேட்டான்போல் தலைசாய்ந்தமராம்' என்றதற்கேற்பக் குனிந்தொதுங்கிநின்றார் கண்ணகியார். வீடு பெறுங்குறிக்கோள் கொண்டு துறவறமேற்கொண்ட கவுந்தி யடிகள் மாதரியைநோக்கி, 'தன் றுயர்காணுத்தகைசால் பூங் கொடி கற்புக்கடம் பூண்டவித் தெய்வமல்லது பொற்புடைத் தெய்வம் யாங்கண்டிலமால்' எனக்கண்ணகியாரைப் புகழ்ந்தன ரெனின் கற்புடைப்பெண்டிர் பெருமை நம்சொல்லி லடங்கு வதோ! இடைச்சேரியில் மாதரியமைத்த இல்லில் தன்கண வனுக்கென உணவமைத்து மண்ணகமடந்தை மயக்கொழிப் பவள்போல் நீரால் நிலப்புழுதிநீக்கி பரிகலத்தில் கோவலனுக்கு உணவளித்தார். இங்ஙனந்தன்கணவனைப் பேணலே முறை யெனக்கருதி நாணமும்மடனும் நல்லோரேத்தும் பேணியகற்பும் பெரும் துணையாகத் தன்னெடுபோந்து தன் துயர்களைந்த கண்ணகியாரைக் கோவலன் பொன்னே! கொடியே! எனப் போற்றுகின்றான். இங்ஙனம் அடங்கியொழுகிய கண்ணகியா ருளத்துச் சினந்தோன்றும் படிய கொடுஞ் செயலை மதுரை நகரிழைக்கவே அதனையறிந்த அம்மையார் ஞாயிற்றை விளித்து வினவி கொழுநன் குற்றமிலனெனக் கூறக்கேட்டுக் அவனை யடைந்தா தழுவி அவன், 'ஈங்கு இருக்க' எனச் சொல்லி யேகுத லறிந்து அவன் குற்றமிலனுதலை ஊராருணர்தற் பொருட்டுச் சினந்தெழுந்து ஒற்றைச் சிலம்பினையேந்தி தென்னனை யண்மி, தேராமன்ன செய்புவதுடையேன் எனத் திண்மையாற்செப்பி வழக்குரைத்து வென்றார். மன்னனும் தன் தவறுணர்ந்து தாழ்ந்த குடையனுய் மயங்கி உயிரிழந்து அரியணையில் வீழ்ந் தனன். அவன் மாதேவியாரும் 'கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவதில்லென்று இணையடி தொழுது வீழ்ந்தவர் தன்னுயிர் கொண்டு அவனுயிர்தேடினர்போல் ஒருங்குயிர்விட்டு அறக்கற் புடையாராகத் திகழ்ந்தனர். அதன்பின்னரும் கண்ணகியார்

வெகுண்டு ஊரையெரித்ததன் நோக்கம் தன்கணவன் குற்ற மிலான் என்பதனை உலகமுணர்தற்பொருட்டன்றிப் பிறிதன்று. இங்ஙனம்மதுரை மூதூரைக்கற்பின் தழலாற்சுட்ட கண்ணகியார் அந்நகரத்தை நீங்கும்பொழுது 'கீழ்த்திசைவாயிற் கணவனொடு புகுந்தேன். மேற்றிசைவாயில் வறிது மீள்வேன்' எனச்சொல்லி யகன்றது உளமுருக்குந்தன்மையது. மதுரைநீங்கிய கண்ணகி யார் நெடுவேள்குன்றத்து வேங்கை நிழலில் தன்கணவனொடு எதிர்வந்து தேவர் போற்றியழைக்க விண்ணகமாதர்க்கு விருந் தாயினர். இதனைக்குறவர்வழி யுணர்ந்த செங்குட்டுவனார் தன் னாட்டிற் கோயிலமைத்து வழிபட்டார். இலங்கைக்கயவாகு முதலிய பிறநாட்டரசர்களும் அவர் வரம்பெற்றுத் தம்நாடுகளிற் கோயிலமைத்து வழிபட்டார்கள்.

## ஊழ்வினை

ஊழ் என்பது ஒருபிறப்பில் செய்யப்பட்ட இருவினையும் அடுத்தபிறப்பில் செய்தவரை நிழல்போல்விடாது தொடர்ந்து உருவெடுத்துவந்து இன்ப துன்பத்தை யூட்டுமியல்பினதாய நியதியாகும். கோவலன் தன் முன்பிறப்பிற் சிங்கபுரத்தில் பரதன்என்ற பெயரொடு சங்கமனென்ற வணிகனைக் கொலைசெய் வித்த தீவினையே அடுத்த பிறப்பில் உருவெடுத்து மதுரை நகரத்திற் கோவலனைக் கொல்வித்தது. கண்ணகியைப் பிரித்து மாதவியுடன் கூட்டி அவளைக்கொண்டுமயக்கிக் காதன்மிக்குழிக் கற்றவை கைகொடாமற்செய்து ஒருகாரணமுமின்றி இவருக்கும் ஊடலேற்படுத்தி கோவலனை மாதவியினின்றும் பிறித்தது. இந்திரவிழாவில் ஊடல்தீரும் செவ்வியமைந்து தீதுநீங்கக் கட லாடிய விடத்தும் தன்கொடுமையைத் தோற்றுவித்தது. அவ் விடத்து இவர்பிரிதற்கு ஊழைத்தவிரக்காரணமில்லை. கண்ணகி வருத்தங்கண்ட கோவலன் உலந்தபொருளீட்ட வுளங்கொண்டு அவளுடன் நள்ளிரவில் ஒருவருமறியாவகை, வினை கடைக்கூட்ட வியங்கொண்டான். இவ்விடத்து 'மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்' என்றபடி தன்னலந்தரச் சூழ்ந்த பொருட்செல வாகிய சூழ்ச்சியை முந்திமறுத்து மாறுபடுத்தியது ஊழ்தான். நன்னிலைக்கட்டவருத பாண்டியரவையத்துஅரசன்றிருமுன்னர் நாட்டினமைதி கெட வந்திறுத்த கோவலனது ஊழ் பொற் கொல்லனுருக் கொடுவந்து நின்றது. அரசியின் சிலம்பிழந்த் கருத்தொடு அவனைக் கொல்லன் தொடர்கின்றான். இந்நிலையில் ஊழ்வினையானது இக்கொடுஞ்செவ்வியாகத்தோற்றி 'கள்வனைக்

கொன்றச் சிலம்பினை கொணர்க ஈங்கு’ என்னும் மன்னவன் கட்டளையைப் பிறப்பித்தது. கன்றிய காவலராற் கொல்லப்பட்டு ‘காவலன் செங்கோல் வளைஇய வீழ்ந்தனன்’ பண்டையூழ்வினை யுருத்தெனன’ என அடிகள் கூறுகின்றார். ‘வல்வினை வளைத்தகோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது’ எனச் செங்குட்டுவன்கூற்றாக அடிகள் கூறுதலால் கோவலன் தீவினையே காவலன் செங்கோலைவளைவித்தது என்பது பெறப்படும்.

## தமிழர் வாழ்க்கை

ஆசிரியர்க்குரிய கைம்மாறு அவர்சொல்லியதனை மறவாது பிறர்க்குரைத்தலே. கதிரவனொளி திங்களைவிளக்கும். சிலப்பதிகாரத்திற் கூறப்பட்ட மூன்று குறிக்கோளும் பிறபண்புகளும் கலந்ததேதமிழர்வாழ்க்கை. வாழ்க்கைஅரசியலைப்பொறுத்ததே. சேரன் கண்ணகியின் சிலையெடுக்க வடநாடு சென்றகாலை ‘வறிது மீளுமென் வாய்வாளாகிற் குடிநடுக் குறாஉங் கோலேனாகுக’ என வஞ்சினங் கூறுதல் கொண்டு பண்டயரசர் நோக்க மினிது புலப்படும். சேரனிடத்துப் பரிசில்பெற்ற பார்ப்பான் பாண்டிய நாட்டுத் **தண்கால்**என்ற ஊருக்குவந்தபொழுது, தண்டு, கமண்டலம் முதலிய தாங்கியவன் தன்முன் விளையாடும் சிறார்க்குப் பரிசளிக்கக் கருதி வார்த்திகன் புதல்வற்குப் பரிசளித்தான். அப்பரிசில் கண்ட ஊரார் புதைபொருளஃதென அரசற்குரைக்க மன்னவன் வார்த்திகனைச் சிறையிட்டான். இம்முறைக் கேடால் கொற்றவைகோயில் திறக்கப்படாமை கண்டு வார்த்திகனைச் சிறைவீடுசெய்து இருநில மடந்தைக்குத் திருமார்பு நல்கினான் என்பர்அடிகள். பெருமகன்றலைவைத்த ஒரு தனிக் குடியெனக் கோவலன் குடும்பத்தை அடிகள் குறிப்பிடுவதால் அக்காலத்துச் சனநாயக ஆட்சியுண்டென்பது வற்புறுத்தப் பட்டது. புகார்நகர வருணனைகொண்டு அக்காலத்துத் தமிழர் சமூக வாழ்க்கை நன்கு புலப்படுத்தப்பெற்றது. மான்கட் காலதர், மிலேச்சர் உறைவிடம், கருங்கைக்கொல்லர் முதலிய தொழிலாளர்களும் நுண்கலையாளர்களும் வாழும் தெருக்கள் காவிரிப்பூம்பட்டினத்தை அழகுபடுத்தினவென அடிகள் கூறுதலால் அக்காலத்தமிழரின் செல்வச் செழுமையும், தொழில் வாணிகவுயர்வும் வருணங்கருதா நல்வாழ்வும் பிறவும் செவ்விதிற் புலனாகின்றன. நான்கு வருணப்பூதத்தைப் பற்றிய பகுதி இளங் கோவடிகளாற் கூறப்படாத இடைச் செருகலேயாம். குடும்பவாழ்க்கையில் பெண்கள் யானைமீதிவர்ந்து மணநிகழ்ச்சியறிவிக்கும் முறை அக்காலத்ததாகத் தெரிகின்றது. குழந்தை

கட்குப் பெயரிடும் விழா உண்டென்பதை மணிமேகலையின் பெயரிடு நிகழ்ச்சி புலனாக்குகின்றது. அக்காலத் தமிழர்கள் கூட்டுக் குடும்ப வாழ்வினைக் கொள்ளாது தனிக் குடும்பப் பிரிப்புடன் வாழ்வு நடத்தினமை மனையறம்படுத்த காதையால் அறிவிக்கப்படுகின்றது. சமய முரண்பாடுகளை அக்காலத் தமிழர் கருதினாரல்லர் என்பது புகார் முதலிய நகரின்கண் பல் சமயக் கோயில்களும் மக்களும் நெருங்கினமை கூறப்படுதலால் தெளியலாம். கொற்றவை வழிபாடு, கொற்றவையுருவினைப் பெண் மேற்கொள்ளல், கொற்றம் முதலிய வேட்டுவர் வாழ்க்கைநிகழ்ச்சிகள் வேட்டுவ வரியிற் குறிப்பிடப்படுகின்றன. உற்பாதங்கண்டு அதனைத் தீர்க்கும்படி தெய்வத்தை யுன்னிக் குரவையாடும் மரபுண்டென்பதனை ஆய்ச்சியர் குரவையா லறியலாம். தமிழர் பிறர்க்குதவுவதே வாழ்க்கையின் நோக்கமெனக் கருதினர். அது நிறைவேறாதாயின் அஃது உதவா வாழ்க்கையாகக் கருதப்பட்டது. அக்காலத்தில் கலைகள் ஓங்கி வளர்ந்தன. இந்திரவிழாவி லீடுபட்ட புகார்நகரமக்கள் யாழ்ப்பயிற்சி, உறழ்ச்சி முதலிய கலை வளர்ச்சியிலீடுபட்டனர் என்ற செய்தி இதனை வலியுறுத்தும். 'முதிர்பூந் தாழை முடங்கல் வெண்டோட்டில் பித்திகையாற் செம்பஞ்சிற் றோய்த்துக் கோவலனுக்கு மாதவி முடங்கல் எழுதினாள் என்பர். தம் வாழ்வைப் பிறர் பொருட் டாக்கிய அக்காலத் தமிழர்வீறு கோவலன் செய்த பெருஞ் செயல்களாற் கூறப்பெறுகின்றது. இந்நூன்முடிவில் அடிகளாற் கூறப்பெற்ற அறிவுரைகள் அக்காலத் தமிழ்ப் பெருமக்கள் உட்கிடையினை நன்குணர்த்தி நிற்கின்றன.

## அரசு பிழைத்தோர்

சாத்தனார்பால் கண்ணகியின் கலுழ் வாழ்வைக் கேட்டுணர்ந்த இளங்கோவடிகள் அவர் கூறிய நுண்பொருளை அரசியல் பிழைத்தோர்க் கறங் கூற்றாகுமெனவும், உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர் எனவும், ஊழ்வினை தானே உருவெடுத்து வந்தூட்டுமெனவும் மூவகையாற் பிரித்துக் கூறுவர். அரசியல் பிழைத்தோர்க்கு மக்கள் கூற்றுவரென்னாது அறமே கூற்றாகு மென்றார். அறமாவது அனுபவத்தால் பிறர்க்கு தீங்கு பயத்தலின்றிஎக்காலத்தும்எவ்வுயிருக்கும்நன்றுபயக்கும்நற்செயலாம். இத்தகைய அறம் நிலைபெற்றதே அரசியலாகும். இக்காலத் தரசர்கள் நாடோறுமழிதல்போலாது நம்பண்டைத் தமிழரசர்கள் திருமாலாகிய திருவுடைமன்னராகத் திகழ்ந்தனர்.

இறைவனையொத்து மன்னுயிரனைத்துந் தன்னுயிரெனக்கொண்டு உலகங்காத்தற் றொழிலுடைமையால் இறையெனப் போற்றப் பெற்றனர். 'மாதவர் நோன்பும், மடவார்கற்பும் காவலன்காவல் இன்றெனின் இன்றும்' 'அருந்திறலரசர் முறைசெயினல்லது பெரும் பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது, என்பன போன்ற உறுதிமொழிகள் இயற்கையும் இவ்விறைவனுணை வழியியலு மென்பதை வலியுறுத்துவன. 'குடிநடுக்குறாஉங் கொடுங் கோன்மையாளர்களாற் குடிகள் அல்லற்பட்டு ஆற்றாதழுத கண்ணீரே அவர்தம் செல்வத்தைத் தேய்த்தற்குரிய படையாம் என்றார் திருவள்ளுவனார். பாண்டியன் கோவலன் ஊழானன் றித்தன்னூழானும் பிழைத்தனன். கொல்லக்கொணர்க வென்னாது கொன்றச் சிலம்பு கொணர்கவீங்கெனக் காவலனைக் கூறச் செய்தது கோவலன் தீவினையே. அறங்கிடந்த நெஞ்சு, கோல் எனச் சிறப்பிக்கப்படுதலால் அரசனுள்ளத்து அறம் நிலை பெற்றமை புலனும். அரசியலினும், கற்பினும் உலகநன்மை தொக்கனவெனக் கூறுவோர் பெரியோர். அரசியலுக்கும் உலக வாழ்வுக்கும் மகளிர் கற்பு இன்றியமையாது வேண்டப்படும்; கூடலான் கூடாக அவனின் நீங்கிச் சென்றஅறம் ஆவிகுடிபோன கண்ணகியின் உடலுளத்திற்றங்கிப் பாண்டியனுயிரைப் போக்கியது. பிழைத்தல் என்ற சொல் அறியாமற்செய்த பிழையினை யுணர்த்துமாதலால் கோவலனைக் கொல்லவென, ஓராது கட்டளையிட்ட பிழையினைக் குறித்து நின்றது. இங்ஙனம் கோவலனது வல்வினையால் வளைக்கப்பட்ட கோலை மன்னவன் செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது என்றான் செங்குட்டுவன்னும் அரசனும். மன்னவன் தீதிலன் என்றார் தெய்வமாகிய கண்ணகியாரும்.

இந்நான்கு சொற்பொழிவுகளும் நிகழ்ந்தபின்னர் ஆசிரியர் பண்டிதமணியவர்கள் அப்பொருள்களின் தெளிவுபற்றிய பல்லுரைகளை மொழிந்து தெளிவித்ததோடு சிலப்பதிகார ஆசிரியராய இளங்கோவடிகளின் வித்தகம்வாய்ந்த முத்தமிழ்ப்புலமையையும் அவர் நூலின் நன்னயங்களையும் நன்கெடுத்து விளக்கினார்கள்.

பின் தில்லைத்தமிழ்க்கழகத்தமைச்சர் திரு, ச. க. கோவிந்தசாமிப்பிள்ளையவர்கள் பேசியதாவது:—

திருவாளர், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் அண்ணமலைப்பல்கலைக்கழகத்தமிழ்ப் பேராசிரியராக இருந்தபொழுது

ஒரு கழகம் இப்பெயருடன் தோன்றியது. 100 — ரூ பொருள் நிலையும் அக்காலத்துப்பெற்றது. பின், அது வேலை செய்யா தொழிந்த நிலையில் இத்தில்லைக்கழகம் நண்பர்கள்உதவிகொண்டு தோற்றுவிக்கப் பெற்றது. இற்றைநாள் பொருள்வருவா யின்றியும் இதுநிகழ்ந்துவருகின்றது. இத்தகைய கழகத்தைத் தோற்றிஎம்போன்ற ஆங்கிலம் கற்றார்க்கும் பிறர்க்கும் தமிழ் நூல்களைப் பாடஞ்சொல்ல வேண்டுமெனப் பல்லாண்டாகத் தமிழறிஞர் பலரைவேண்டியும் அவர் முன் வந்திலர். ஆனால் நம் பண்டிதமணியவர்கள் வந்தநாள்தொட்டு அவர்கள்முயற்சி பெற்றே இதுஉருப்பெற்று வளர்ந்துவருகின்றது. கழகந் தோன்றியது முதல் இதுகாறும் ஆசிரியர் பண்டிதமணியவர்கள் சிலப்பதிகாரத்திற்குப் பொருளுரைகூறி மகிழ்வு தந்தார்கள். இன்றியமையாத தடைபல நிகழ்ந்த சிலநாளன்றி ஏனை ஞாயிறு களிலெல்லாம் அவர்கள் முன் வந்து பொருளுரைப்பதுடன் வெளியூரறிஞர் பலரை யழைத்துச் சொற்பொழிவாற்றவுஞ் செய்து வருகிறார்கள். இதுகாறும் 50 ஞாயிறுகளில் சிலப்பதி காரப் பாடம் நடத்துங் குறிக்கோளோடு திங்கள்வரியுந் தந்து தங்கள் வண்டியிலேயே இவண்வந்து மதுரைக்காண்டம் முடிய இதனை நடத்தி நிறைவேற்றினார்கள். இவ்வாறு எங்கட்கெளி வந்துதவிய ஆசிரியர், பண்டிதமணியாரவர்கட்கு யாம் செய்யும் கைம்மாறுவது அவர்கள்கற்பித்தவற்றை மறவாதுபிறர்க்குரைத் தலையன்றிப் பிறிதொன்றுமில்லை. எனினும் எங்கள் அன்பின் அறிகுறியாகத் தரப்பெறும் சிறு கையுறையினை அவர்கள் ஏற் றருளவேண்டுகின்றேன்.'' எனக்கூறி, கலைமகளுறையும் வெண் டாமரை மலர்போன்ற வெள்ளித் தட்டொன்றும், அதனகத் தெழுந்தருளியுள்ள கலைமகளுருவுக்கேற்பப் பட்டுடுத்த சிலப் பதிகாரமும் வைத்துத் தலைவர் முன்னிலையில் வைத்தார்கள். தலைவர் தமிழவேள் அவர்கள் அதனைத் தில்லைத் தமிழ்க் கழகத் தின் கையுறைப்பொருளெனக் கூறிப் பண்டிதமணியவர்களிடம் தந்து பாராட்டிப் பேசியதாவது :—

இவ்விழாவில் கலக்கும் பேறளிக்கும் உங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். 28-யாண்டாக யான் கண்ட சங்கங்களுள் ஒன்றும் இக்கழகம் மூன்றாண்டிற்குள்ளாகச் செய்த தொண் டளவு செய்ததில்லை. மதுரைச் சங்க முதலாகப் பல காணப் படினும் அவை இத்தொண்டினைச் செய்ய முன் வந்ததில்லை. அவ்வாறே யுறுப்பினரும். நல்லாசிரியர் துணைகொண்டு நூல்பயில வெண்ணும் தமிழ் நலமுணர்ந்து விரும்பிய உறுப்பினரை அவற்

றிற் காணப்பெற்றிலேன். தகுதியுடைய பெரியாரால் தமிழ்ப் பணியாற்றப் பெறும் கழகங்களுள் இஃதொன்றே தலையாயது. தமிழறிஞரை மதியாத இச்செவ்வியில் நுண்ணறிவுக் கலையாள ராய ஆங்கிலவாசிரியர்கள் தமிழாசிரியர் துணைகொண்டு தமிழ் பயின்று உயர்வளித்துத் தொண்டாற்றுவது தமிழர் செய்த தவப்பயனாகுமென்பதில் சிறிதுமையமில்லை. இத்தமிழ் கழகக் கொடி தழைக்க ஒளியுதவும் கதிரேசனாக, நம் பண்டிதமணி யவர்கள் வாய்த்தது தமிழ்நாடு செய்த தவப்பயனேயாம். இத் தகைய நல்லாசிரியர் கிடைப்பதருமை. எங்கும் தமிழொலிகேட்க விழையுமிந்நாளில் எத்தனை யிடங்களில் இத்தகைய தமிழா ராய்ச்சி நிகழ்கின்றது என வினவுமிடத்து விடையின்மை யறிய லாம். நன்மாணாக்கரைக்கொண்டு உள்ளத்தின்கண் உயர் வளித்துக் கலைவிளக்கந் தரும் ஆசிரியர் பண்டிதமணியவர்கள் தமிழ்மொழிக் குறுதுணையாய் நின்று, அறிவு விளக்கமின்றிக் குழறும் ஆசிரியர் போலாது, ஆங்கிலமொழி அறிந்த அறிஞர் உள்ளப் பண்புகளைத் தமிழ்மொழியிற் குறிப்பிடும் பண்பு தந்த ஆசிரியராவார். இவர்களை முன்னின்று பாராட்டுவது முகமன் மொழிவதாகும். பல்லாண்டாகத் தங்கள் நாட்டில் நகரத்தார் களை யூக்கித் தமிழ்க் கல்லூரி யமைக்கச் செய்து புலவராக்கும் பொற்பு இவர்கள்பால் மிளிர்கின்றது. எடுத்துக் காட்டாக மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபை நிலைத்த தொண்டாற்றுவ தற்கு இவர்களை யுயிரெனக்கொண்டு இவர்கள் குறிவழிநிற்பதே உரிய காரணமாம். வடமொழிக் காவியங்களின் உளநிலைச் சுவையுணர்ந்து சொற்பொழிவு செய்யவல்ல இவர்கள்வடமொழி நூல்களைத் தெள்ளத்தெளிந்த தமிழ் நடையில் மொழிபெயர்த்த பெற்றி, பிறவிணர் எழுதிய ஏனைய நூல்மொழி பெயர்ப்போடு ஒத்து நோக்குமிடத்து நன்குவிளங்கும். ஒருமொழி யுணர்ந்த சிலரும் தமிழ்நிலை யுரைக்குமிடத்துத் தமிழைக் குலைத்துப் பிற மொழிப் பெருமை கூறித் திரிகின்றனர். இதனால் தமிழின் எழில்மேனி மாசுபடுகிறது. ஆனால் நம் பண்டிதமணியவர்களின் மொழி பெயர்ப்போ வளம்பெற்ற தனித்தமிழ் நடையிலமைந்து மிளிர்தல் கண்கூடு. இவ்வுண்மை சுக்கிரநீதி, மண்ணியல் சிறு தேர் ஆகிய மொழிபெயர்ப்பால் நன்குபுலனாம். இவர்களிடத்து யான் பன்முறை வேண்டிய தொன்றுண்டு. வடமொழி நூல் களினது தொனியலங்காரமுணர்ந்த இவர்கள் அவற்றைத் தொகுத்துத் தமிழியன்முறையில் வெளியிடவேண்டுமென்பதே.

பிறமொழிச்சொற்களை வழங்குவதில் எரிவில்லை. ஆனால் அம்மொழிகள் நம்மொழியின் இலக்கண ஒலிவரம்பிற் பட

வேண்டுமென்பதே தமிழர்நோக்கம். பயனறியாவினர்களுக்குத் தரும்பரிசில்போல இந்நோக்கத்திற்பிழையாது தொண்டாற்றும் பண்டிதமணி போன்ற தமிழாசிரியர்களுக்குத் தமிழ்நாட்டில் பரிசளித்துப் பாராட்டும் நன்னோக்கம் தமிழருள தோன்றா தது வருந்தத்தக்கது. தமிழாக்க வேலையிலீடுபடும் கடமை கொண்ட அண்ணுமலைப்பல்கலைக்கழகம் இத்தகைய தமிழறிஞர் களைப்பெரிதும் போற்றுதலைக் கடமையாகக்கொள்ளவேண்டும். தமிழர்கள் கலைகளைப் பிறர்ஆதரவுநோக்காது தந்தனிநிலையிலீடு பட்டுழைத்து வளர்த்தல்வேண்டும். நம் பண்டிதமணியவர்கள் போன்ற அறிஞர்களைப் பல்கலைக்கழகம் தன்னகத்துக்கொண்டு நிற்கும்வரை அது நம்வாழ்த்துடன் என்றும்நிலைபெறுவதாக. அன்றேல் அதனாற்பயனென்? எவ்வாற்றானும் தமிழர்களைப் புலவராகப் படைத்து நிற்கும் புலவர்பிரான் பண்டிதமணி யவர்கள் அவையத்து முந்தியிருக்கும் பொற்பினைமாணவர்க் கருளி பல்லாண்டுவாழவேண்டும் எனஎல்லாம்வல்ல இறைவனைப் பணிந்துவேண்டுவோமாக. இத்தகைய நல்லாசிரியரையுணர்ந்து, அவர் வழியொழுகித் தம் ஆங்கில மொழிப்பயிற்சி முதலிய வனைத்தும் பாராட்டாது தன்னேரிலாத்தமிழே தம்முயிராகக் கொண்டு பண்டைத்தமிழ்நூல்களைப் பயின்றுவரும் இத்தில்லைத் தமிழ்க்கழக உறுப்பினரின் அன்புடைய முயற்சியும், நோக்கமும் தமிழறிஞர்களாற் பாராட்டத்தக்கனவே. இக்கழகத்தினரை எடுத்துக் காட்டக்கொண்டு தமிழ்நாட்டுக் கழகங்கள் தமிழை வளம்படுத்த முயலவேண்டுமெனப்பெரிதும்வேண்டுகின்றேன்'' எனக் கூறி முடித்தார்கள்.

பின் திருவாளர்—குஞ்சிதபாதம் பிள்ளையவர்களும், திரு பெரியசாமியவர்களும், பண்டிதமணியவர்களுக்கும், தலைவருக் கும் நன்றி கூறினார்கள் பின் திரு. ஞா. மகாதேவன் வீணையிசை யரங்கினை நிகழ்த்தினார்கள். அமைச்சர் நன்றியுரையுடன் இளங் கோவடிகள் விழா இனிது நிறைவேறியது.

—+—

# தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்

THE TAMIL PROTECTION SOCIETY

பவழக்காரத்தெரு, சென்னை.

---

ஐயா,

தமிழ்மொழிவளர்ச்சி கருதியும், பொதுமக்கள் கல்விவளர்ச்சி கருதியும் உழைப்பதென்ற நோக்கத்துடன் நிறுவப்பட்டுள்ளது எங்கள் கழகம் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு, கீழ்வரும் குறிப்புக்கள் சிலவற்றைத் தங்களுடைய அன்பார்ந்த பார்வைக்கு அனுப்பிவைக்கக் கடமைப்பட்டுள்ளோம் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இப்போது ஆதிக்கம்பெற்றுள்ள அரசியலாரின் தேர்ந்த கொள்கைக் கேற்பவே இவற்றைத் தங்களுக்கு எழுதியனுப்பத் துணிந்தோம். பேருக்கமும் பொது நலமும் சான்ற தாங்கள் ஆர்வத்துடன் முயன்று ஆவன செய்வீர்களென்ற நம்பிக்கை பெரிதும் கொண்டுள்ளோம்:—

(1) தங்கள் கண்காணிப்பின்கீழுள்ள நகரத்தெருக்களின் பெயர்களெல்லாம் சரியான தமிழில் பிழையில்லாமல் எழுதப்படுதல் வேண்டும்; (வேண்டுமிடத்து அவற்றின் ஆங்கிலப் பெயர்களையும் உடன் சேர்த்துக் கொள்ளலாம்.)

(2) நகராண்மைக் கழகத் தொகைமுறைக் கடிதங்க (Standardised forms)ளெல்லாம் சரியான தமிழில் பிழையின்றி எழுதப்படுதல்வேண்டும்.

(3) கழக நடவடிக்கைகள், உட்கழக நடவடிக்கைகள் எல்லாம் இயன்றவரை சரியான தமிழில் பிழையின்றி எழுதப்படுதல் வேண்டும்.

(4) கழகக் கடிதப்போக்குவரத்துக்கள் இயன்றவரை சரியான பிழையிலாத தமிழிலேயே இருக்குமாறு குறிக்கொண்டு முயலுதல் வேண்டும்.

வேண்டிய அளவுக்கு ஆங்கிலப் பயிற்சியுள்ளதமிழ் வித்வான் ஒருவரை உதவிக்கு அமைத்துக் கொண்டால் மேற்கண்ட நோக்கங்கள் யாவும் எளிதில் நிறைவேறும் என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழ்மொழியின் வளர்ச்சியிலும் முன்னேற்றத்திலும் மிகுந்த அன்பு வாய்ந்துள்ள தாங்கள் இத்துறையில் பெரிதும் முயன்று ஆவன செய்யுமாறு மீண்டுமொருமுறை தங்களை வேண்டிக் கொள்ளுகிறோம்.

தங்கள் அன்பும் பணிவுமுள்ள,

வ. சுப்பையா பிள்ளை.

தமிழ்க்கல்வி யளித்த

உயர்திரு. பண்டிதமணி யவர்கட்கு

வெள்ளியளித்த விழாநாளில்,

தலைமை தாங்கிய தஞ்சைத் தமிழவேள்,

**உயர்திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை**

அவர்கட்குத் தில்லைத் தமிழ்க்கழகத்தார் படித்தளித்த

# வாழ்த்துப்பா

(மயங்கிசைக் கோச்சகக்கலிப்பா)

சொற்கொண்ட செருத்துணையார் சோர்வில்லாச் சிறுத்தொண்டர்
மற்கொண்ட இயற்பகையார் மயிலியலி புனிதவதி
செப்பரிய அதிபத்தர் சேணோங்கும் அமர்நீதி
தப்பறியாக் குங்கிலியர் தாவில்சீர்க் கணம்புல்லர்
இப்பெரியார் அவதரித்த எழிலிடங்கொள் தஞ்சையினில்
நல்வேம்பின் தவப்பயனாய் நானிலத்திற் றமிழ்வேளாய்ச்
செந்தமிழின் புரவலனாய்ச் சேவுகைத்தார்க் கன்பனுமாய்
வந்துதித்த பெரியோயே வருகவுமா மகேசுரனே!

இது தரவு

முன்னொருநாள் செருத்துணையார் மூக்கரிந்தா ரென்பவே
நன்னர்தமிழ் பழிப்பார்பன் னவரியுஞ் செருத்துணைநீ,
அன்றொருநாள் சிறுத்தொண்டர் வாய்காத்த ரென்பவே
இன்றுபல வாய்காக்கும் இன்றமிழ்க்குத் தொண்டனீ,
இல்லினையுந் துறந்திட்டா ரியற்பகையாரென்பவே
இல்விழந்தும் மனைகொள்ளா இயலுறுதி யுடையோய்நீ;
தன்னலத்தைப் புனிதவதி தகைந்திட்டா ரென்பவே
உன்னலமும் உன்னுதே உயர்தமிழிற் குழைப்பைநீ,

இவை நான்கும் தாழிசை

அனைய நிலையின் அறவோய் நின்னை
இனையை யென்றல் எமக்கரி தரிது

ஆங்கிலந் தமிழ்நிறை யருங்கடல் நீ
ஓங்கு மொழுக்கத் துயர்குன் றுந் நீ,
பேசும் பண்பாற் பேரியாறுந் நீ,
வீசும் மன்பால் விண்முகி லுந்நீ,

இவை நான்கும் அளவெண்

ஆங்க,

இது தனிச்சொல்

கரந்தைச் சங்கக் காவல வருக!
அரந்தை யகற்று மார்வல வருக!
தமிழ்க்கே யுழைக்குஞ் சான்றோய் வருக!
தமிழர்க் குழைக்குந் தலைவா வருக!
சிலவாண் டாகவித் தில்லைப் பதியுட்
சிலப்பதி காரம் செவ்விதி னளித்த
பண்டித மணிக்குச் செய்யுமித்
தொண்டினிற் றலைமைத் தோன்ற லாகவே.

இது சுரிதகம்

சிதம்பரம்,
9—4—'39.

இங்ஙனம்,
தில்லைத் தமிழ்க்கழகத்தார்

இயற்றியவர் திரு. அ. சிதம்பரநாதச்செட்டியார், M. A.

---

தில்லைத் தமிழ்க்கழகத்தின் தலைவர்,

உயர்திரு, பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியாரவர்கள்

ஷெகழக உறுப்பினர்கட்கு மூன்றாண்டுகளாகத் தொடர்ந்து
சிலப்பதிகார வகுப்பு நடத்தி முடித்தமை குறித்து
உறுபினர்கள் உளமகிழ்ந்து கூறிய வாழ்த்தியல்

## நன்றியறியுரை

வாழ்த்துவம் பெரிதே வாழ்த்துவம் பெரிதே
காழ்த்துவம் புறைபுலக்கதிரிறை தனையே
வாழ்த்துவம் பெரிதே வாழ்த்துவம் பெரிதே
இமிழ்கடலுடைஇ இலகுறும் பொழிலிடை
அமிழ்திகழ்ந் தொளிர்தருந் தமிழ்திகழ்ந் தோங்கிய 5

வழுதியர் நாட்டிடை வளம்பலமல்கி
மலர்தருஞ் சிறப்புடை மாமகி பாலன்
பட்டியி னிலகுறுஞ் செட்டிடை வணிகர்
பொட்டெனத் தோன்றிய புலவர்தம் மேறே!
குடமுனி யுறழ நெடும்புவி யதனிடை
வடமொழி தென்மொழிக் கடலினைப் பருகி
எண்ணருஞ் சுவைதர மண்ணியல் சிறுதேர்
வெள்ளிநன் னெறியொடு வுள்ளியுள் ளுவக்கத்
தண்டமிழ் மொழியினிற் கண்டநற் புலவ!
காட்டறு முவமையிற் காளியந் தாசனோ?
பாட்டணி பலவணி பனுவல் கம்பனோ?
இவனோ மென்ன எழுதருங் கவிஞ!
அவைமிக மகிழ்தர அகப்பொருள் புறப்பொருட்
சுவையெழுந் திலங்கிய சொல்வல நாவல!
மணநூல் நயம்பல வழங்கிடு மாமழை
புலப்பரப் படர்ந்த சிலப்பதி கார
நுட்பந் தெரிக்குமாண் நுழைபுலத் தரசே!
கேட்டவர் வியப்புறக் கேடரும் பெருஞ்சீர்
நாட்டிய பெரியார் நல்வர லாற்றினைத்
தொடுக்கும் பெரியதொண்டர்நற் புராணக்
கவிச்சுவை யறிந்தும் கனிந்துள முருகித்
தன்வய மழிந்து தனிப்பர வயமாய்
மணிவாசகர் மொழி அணிவாசகமெனும்
அமிழ்தினைச் சுவைத்துமுள் ளகங்குழைந்து புளகிட
மொழிதரும் அன்ப! வழிதரும் நடையோய்!
பாவலர் நாவலர் ஆர்வலர் சூழீஇப்
பண்டித மணியென வெண்டிசை விளங்க
அழைக்கநின் றோயே! அழைக்கநின் றோயே!
எத்தரும் தலமீ தென்றுறை புலியூர்த்
தில்லைக் கழகம் எல்லையற் றோங்கத்
தலைவனாய்த் தலையளி தரும்நறும் பெரியோய்!
கொண்டவெம் பசிநோய் குழந்தையை வருத்தக்
கண்டுண வூட்டும் காதனற் றாய்போல்
எங்கடந் தமிழ்ப்பசி ஏகநன் கதனைத்
தங்கிநின் றூட்டுறுந் தயையிலை குரவ!

புதிதாய்ப் பொழுதொடு மதியாப் பயனொடு!
தந்தநின் தமிழ்க்கொடை தனக்குயாம் செய்வது
வாழ்கபல் லாண்டு வளம்பொதுள் காவிரி
மணலினும் பலவாய் வாழ்கபல் லாண்டென
வாழ்த்துத லன்றி வகைபிறி தறிந்திலம்
அதனால்
மன்றிடைக் குனிக்குங் கொன்றையங் கிழவோன்
இறையரு ளதனால் நீணிலத் திடையே
வாழியர் நெடிதே வாழியர் நெடிதென
வாழ்த்துவம் பெரிதே வாழ்த்துவம் பெரிதே.

சிதம்பரம்,
9—4—'39.

இங்ஙனம்,
தில்லைத் தமிழ்க்கழக உறுப்பினர்கள்.

ஆக்கியோன், உறுப்பினன் காவலன்குடி கோ. சி. பெரியசாமி.

---

## மதிப்புரை

அகலிகைவெண்பா:—

இராவ்சாகேப், திருவாளர், வெள்ளக்கால் வே. ப. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் இயற்றிய சுவைமலிந்த பேரிலக்கியம். 1914-ஆம் ஆண்டில் சேதுமன்னர் இராசராசரின் பேரவையில் புலவர் புகழ அரங்கேற்றம் பெற்றது. இதுபோது மூன்றாம் பதிப்பாகத் திருத்தமும், விரிவும், விளக்கமும்பெற்று வெளிவந்திருக்கின்றது.

'துட்ட புத்தியையுடைய அகலிகை, முனிவேடத்தைப் பூண்டவன் இந்திரன்தானென அறிந்துவைத்தும் குதூகலித்தாள்' என்பது வான்மீகரின் கூற்று.

அகலிகை வரலாற்றை விசுவாமித்திரரால் அறிந்த இராமபிரான் 'அன்னையென்று பொன்னடி வணங்கிப் போனான்' என்றும், 'நெஞ்சினாற் பிழைப்பிலாளை நீ யழைத் திடுதியென்ன' எனவும், 'மாசறு கற்பின்மிக்க வணங்கினை' எனவும் சீராமர் குறிப்பிடுகின்றார் என்றும் கம்பநாடர் கூறுதற்கேற்ப இந்திரனுடன் கூட்டம் நிகழ்ந்தபோது அவனை முனிவனென்றேயெண்ணியிருந்தனள் என்பது கம்பர் கதை.

இவ்விருபுலவர் கூற்றினும் மாறுபட்டுப் புதியதோர் கதையை இந்நூலாசிரியர் சித்திரிக்கின்றனர். இந்திரன் முனிவரின் உருக்கொண்டு வந்து, அகலிகையின் கையினைப்பற்றவும், அவள் அவலமுற்று, அடாத செயலென மறுக்கவும், அவரை றைப் பொருட்படுத்தாது வலிந்து கருத்தை முடித்துக்கொண்டான், இந்நிலையில் அகலிகை நினைவிழந்து சோர்ந்து கிடந்தாள் என இவ்வாசிரியர் முடிக்கின்றார்.

இந்நூல் இந்திரகாண்டம், அகலிகை காண்டம், கோதம காண்டம் எனும் மூன்று காண்டங்களையும், 293 வெண்பாக்களையும் கொண்டு சொற்சுவை, பொருட்சுவை மலிய, காவிய நலங்கள் மிளிர, தீந்தமிழ்ச்சுவை ததும்ப விளங்குகின்றது.

பதப் புணர்ப்புகள் எளிதே தெரியுமாறு சந்திபிரித்தும், ஓசை நயம் விளங்குமாறு அலகு பிரித்தும், நிறுத்தக் குறிகளிட்டும், குறிப்புரை தந்தும், செய்யுளை அடியொற்றிச்செல்லும் உரைப் பகுதியைச் சேர்த்தும் வெளியிட்டது படிப்போர்க்குப் பேருதவியாயிருக்கின்றது. இதன் விலை அணு 10 அல்லது ரூபா ஒன்று.

சென்னை, பவளக்காரத்தெரு 6-ல் உள்ள தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் செவ்வனம் பதிப்பித்திருக்கின்றனர்.

**மகாகவி காளிதாசன் :—**

வடமொழிப் புலவர் காளிதாசரின் வரலாறு, கவிநலம் முதலிய பகுதிகளை நன்கு விளக்கியும், இரகுவமிசம், குமார சம்பவம் என்ற இலக்கியங்களையும், சாகுந்தலமெனும் நாடகத்தையும் மொழி பெயர்த்தும் திருச்சிராப்பள்ளியிலுள்ள இராமச்சந்திரபுரத்து அன்பு நிலையத்தார் வெளியிட்டிருக்கின்றனர். திருவாளர், சுவாமி, சுத்தானந்த பாரதியார் அவர்களின் சிறந்த புலமையும், இடையறாத் தமிழ்த்தொண்டும் துணைநின்று இவ் புரிய நூலை ஆக்கியுள்ளன. இதனைச் சுவைத்துத் தமிழுலகு இன்புறுவதாக!

—✦—

# விண்ணப்பம்

அன்பரீர்,

நலம்; கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடாகிய "தமிழ்ப் பொழில்" இறைவன் திருவருளாலும், தமிழன்பர்களின் பேருதவியினுலும் பதினுன்காண்டுகளாகத் தமிழ்ப்பணியாற்றி வருகின்றது.

இதன் எதிர்கால வாழ்வு கட்டுரை வழங்குவோர், இதழன்பர்கள் என்னும் இருதிறத்தினராகிய தமிழன்பர்களின் கையிலிருக்கின்றது.

பல அன்பர்கள், எளிய நடையில் எழுதப் பெறவில்லையென்றும், புதுவதான கருத்துக்கள் (Modern thoughts) இதன்கண் வருவதில்லையென்றும் குறைகூறித் தமது பொறுப்பைக் கழிக்கின்றனர்.

குறைந்த எண்ணினரே இதழுறுப்பினரா யிருப்பதால் பொழிலை வளனுறச் செய்தற்கியலா திருக்கின்றது. ஆண்டு தோறும் கைப்பொருளை இழந்தும் வருகின்ரேம். என்ருலும் சங்கத்தார் ஊக்கந் தளராது தமிழ்ப் பொழிலைப் போற்றி வளர்த்து வருவது போற்றத்தகும் செயலாயிருக்கின்றது. புத்தாண்டினில் அன்பர்கள் பலரும் உறுப்பினராகச் சேர்ந்தும், உறுபொருள் கொடுத்தும், புதுக்கருத்துடைக் கட்டுரைகள் எழுதியும் எவ்வாற்ருனும் ஆதரித்து ஊக்குதல் வேண்டப்படுகின்றது.

கட்டுரை வழங்குவோர் நினைவில் வைக்கவேண்டிய செய்திகள் சிலவற்றை விளக்க விரும்புகின்றேன் :

1. கட்டுரைகள் தெள்ளத்தெளிந்த தீந்தமிழ்நடையில் விழுமியபொருளை விளக்கமுற எழுதப்பெற்றனவாதல்வேண்டும்.

2. தமிழ்ப்பொழில் பக்கம் நான்கிற்குமேல் தொடராது கட்டுரை முடிவு பெறவேண்டும். நீண்டபொருளாயிருக்குமாயின் இக்கூறிய அளவில் முடியும் சிறுபிரிவுகளாய் வகுத்து எழுதப்பெறவேண்டும்.

3. தமிழ்ப்பொழிலில் வெளியிடுதற் கனுப்பப்பெறும் கட்டுரை வேறெந்தத் தாளிலும் வெளிவந்திருக்கவும், வெளிவரவும் கூடாது.

இவையன்றி மற்றொரு விண்ணப்பமும் உண்டு.

சிறந்தமுறையில் தமிழ்மொழி, தமிழிலக்கிய இலக்கணம், தமிழ்ப்புலவர் வரலாறு, சுவைமலிந்த தனிப்பாடல்கள், மொழி பெயர்ப்புகள், வெளிவராதிருக்கும் அரிய நூல்கள், கலைப் பொருள்கள், புதிய கருத்துரைகள் இவை போல்வன பிறவும் எழுத வல்லவர்களை எழுதுமாறு ஊக்கவேண்டும்; எமக்கும் அவர்களை அறிமுகப்படுத்தவேண்டும். தத்தமக்குத்தெரிந்த அன் பர்களைப் பொழிலுறுப்பினர்களாகுமாறு தூண்டவும்வேண்டும்.

இவ்வாறான உதவிகள் ஞாலத்தின் மாணப் பெரியனவாய்ச் சங்கத்தாரால் நன்றியுடன் மதிக்கப்பெறும்.

இங்ஙனம்,
பொழிற்றொண்டன்,
த. வே. உமாமகேசுவரன்.

க. த. சங்கம்,
10—5—39.



## கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை



## மின்னொளி விளக்குப்போட வேண்டுகோள்

நமது தமிழ்ச் சங்க எல்லையுள் போதிய வெளிச்ச வசதிகள் இல்லை. சங்க எல்லைக்குள் எந்நாளும் இருந்து பயின்றுவரும் தமிழ்க் கல்லூரி மாணவர்கள், திக்கற்றோரில்ல மாணவர்கள், பிற எளிய மாணவர்கள் ஆய பலரும் நாடோறும் இரவுக்காலங்களில் படிக்கப் பெரிதும் முட்டுப்பா டெய்துகின்றனர். இக்குறைகளை நீக்கும்பொருட்டு விரைவில் மின்சார ஒளி பரப்புவது இன்றியமையாததாகும். அதற் காக அன்பர்கள் தங்களாலான பொருள் உதவி புரிந்து மேற் கண்ட அறப்பணியில் பங்குகொள்ள வேண்டுகின்றேன்.

அன்பன்,
J. M. சோமசுந்தரம்,
அமைச்சர்.